# *Pilgrim's Manual.*

BY

M. C. PATTABHIRAMA MUDALIAR.

**2**

# விஷ்ணுஸ்தல மஞ்சரி

ம. கொ. பட்டாபிராம முதலியார்.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# விஷ்ணுஸ்தல மஞ்சரி

## இரண்டாம் பாகம்.




மயிலை. கோ. பட்டாபிராம முதலியார்

இயற்றியது.



சென்னை

ஸ்ரீ வைஷ்ணவ முத்ராலயத்தில்

பதிப்பிக்கப் பெற்றது,

1927

(இரண்டாவது பதிப்பு.)




[விலை அணா 10

ஸ்ரீ

# முன்னுரை



நமது விஷ்ணுஸ்தல மஞ்சரியின் இரண்டாவது பதிப்பின் முகவுரை முதற்பாகத்தியேலே எழுதப்பட்டுள்ளது. முதற் பதிப்பில் 52-புராண ஸ்தலங்களுக்கே விஷயங்கள் எழுதப்பட்டுள்ளன. இரண்டாம் பதிப்பாகிய இதில் 108-புராண ஸ்தலங்களுக்கு, பிரபாவங்களும், மார்க்கவசதிகளும் எழுதப்பட்டிருக்கின்றன. சென்னையிலிருந்து காசிக்குச் சென்று சுலப செலவில் திரும்பிவரும் மார்க்க விவரம் ஒன்றைஇதில் அநுபந்தமாகச்சேர்த்தால் அது பலருக்கு மிக்க அநுகூலமாயிருக்குமென்று சிலர் கேட்டுக்கொண்டமையால் அவ்வாறே ஒரு விதமாக "காசிக்குச் செல்லும் மார்க்கம்" என்னும் விஷயத்தை அநுபந்தமாக சேர்த்திருக்கிறேன்.

யான் "எனது காசியாத்திரை" எனும் ஒரு நூல் தனியாய் வெளியிடுவதாக உத்தேசித்திருப்பதால், அதில் விஷயங்கள் விரிவாக எழுதப்படும், சோர்வினால் நேரும் பிழையுளதேல் பெரியோர் பொருப்பாராகுக.

சென்னை
25-11-27

இங்ஙனம்,
தொண்டரடிப்பொடி,
ம. கொ. பட்டாபிரான்.

# விஷ்ணுஸ்தல மஞ்சரி

## புராண ஸ்தலங்கள்.

அட்டவணை



## காசிக்குச் செல்லும் மார்க்கம்.



## சிறப்புப்பாயிரம்

மங்கைநல்லூர், தமிழ்நாவலனும்
மாயவரம் "சதானந்த போதினி" ஆசிரியனும்
சென்னை, கலைமகள் புத்தகசாலை, உரிமையாளனு மாகிய
திருவாளர்:—சு. கு. கோவிந்தசாமிபிள்ளை அவர்கள்

இயற்றியது.

### நிலமண்டில வாசிரியப்பா

உலகெலாம் படைத்த வொருதனி முதல்வன்
நிலவு லாவிய நீர்சூ ழுலகில்
நற்றவத் தோர்கள் நாளும் விளங்கும்
உற்றநன் னாட்டில் உயரிய கலையுணர்
பாவலர் போற்றும் பண்புள நாடெனும்
நாவலந் தீவில் நனிசிறந் தோங்குஞ்

சென்னையைச் சார்ந்த திருமயிலை யென்னும்
நன்மைசேர் பதியில் நலந்தரும் வேளாண்
மரபினி லுதித்து மாநிலம் புகழ
திறமுட னில்லறம் நாடத்து மிராம
சாமியின் றவத்தில் சார்ந்தநன் மகவாய்
பூமியிற் சிறக்க புலவரும் மற்றுளோர்
யாவரும் மகிழ அருங்கலை யுணர்ந்தும்
காவியம் நீதி கழறுந் தேற்றம்
கொண்டுள அன்பன் குணத்தில் மிகுந்தோன்
பண்பிற் சிறந்த பட்டாபி ராமன்
திருமா லெழுந்து திகழும் பதிகள்
பெருமைய தாக பெட்புட னணுகும்
உத்தமர் தமக்கு உதவிக ளியற்ற
சித்த முவந்து சேர்த்து ஒருங்கே
இஷ்ட முடனே இன்பம் பயக்க
விஷ்ணு ஸ்தல மஞ்சரி யென்று
வழங்கிய நூலை மாண்புட னேற்று
பழக்கமி தில்லார் பழகிய தன்மை
கொண்டு யாத்திரைக் குதவிடு மிதனை
கொண்டவர் நலம்பலக் கூடிக் காண்பரே.

15-11-27
சென்னை.

இங்ஙனம்,
சு. கு. கோவிந்தசாமி.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# விஷ்ணுஸ்தல மஞ்சரி.

அரியாய அம்மானை அமரர்பிரானை
பெரியானைப் பிரமனைமுன்படைத்தானை
வரிவாளரவினணைப் பள்ளிகொள்கின்ற
கரியான்கழல்காணக் கருதும்கருத்தே.

## புராணஸ்தலங்கள்.

### 1. திருநாராயணபுரம்.

ப்ரபாவம்.—திருநாராயணப் பெருமாள், செல்வப் பிள்ளை, எதுகிரிநாச்சியார், யாதவகிரி, ஆநந்தவிமானம், கல்யாண தீர்த்தம், வைகுந்த தீர்த்தம், பராசர தீர்த்தம், மயித்ரேய தீர்த்தம், தநுஷ்கோடி தீர்த்தம், யாதவ தீர்த்தம், லோகபாவன தீர்த்தம், பாண்டவ தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம். கருடனுக்கு வயிர முடி நிமித்தமாக ப்ரத்யக்ஷம். நஞ்சீயர் அவதாரஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும்:—இது மைசூருக்கு வடக்கே 12-மைலிலுள்ள பிரஞ்சுராக்ஸ் (French Rocks) ஸ்டேஷனிலிருந்து வடக்கே கற்சாலைமார்க்கமாய் 18-மைலிலிருக்கிறது. வண்டிகளும் இன்னும் யாத்திரிகர்களுக்கு வேண்டிய சகல சௌகரியங்களுமுண்டு.

குறிப்பு.—கல்யாண தீர்த்தத்திற்கு அருகாமையிலிருக்கும் குன்றுமிசை அழகிய கோபுரமும் குகையும் தொட்டி தீர்த்தமு முடையதாய யோகா நரசிம்மர் சந்நிதி இருக்கின்றது. வடகலை ஆராதனம்.

பங்குனி மாதத்தில் ஹஸ்தம் இறுதியாகக்கொண்டு 10-நாள் பிரமோத்சவம், 4-வது நாள் பூசநக்ஷத்திரத்தில் வைரமுடிசேவை. இரதோத்ஸவமும் தீர்த்தவாரியும் வெகு விஜோதமாயும் அதி கம்பீரமாயும் நடத்தப்படுகின்றன. இவ் வுத்சவ காலத்தில் திருக்குலத்தாரென்னும் பஞ்சமரும் வந்து தீர்த்தமாடி கோயிலுக்குள்புகுந்து பெருமாளை சேவிக் கிறார்கள். இந்த கடை மூன்று தினத்திலும் ஜாதிபேதம் பாராட்டக்கூடாதென்று உடையவர் நியமனமாம். இது தவிர, ஆடிமாதத்தில் திருவோணம் முதற்கொண்டு ரோகிணி இறுதியாக நடைபெறும் கிருஷ்ணராஜமுடி உத்ஸவமும் விசேஷம். தாயார் சந்நிதி எதிர்மண்டபத்தில் அங்குஷ்ட மாத்திரமாய் ஸ்தம்பத்தில் எழுந்தருளியிருக்கும் உடைய வரை யாத்திரிகர்கள் சேவிக்கமறக்கக்கூடாது. இச்சன்னி திக்கு சமீபமாயுள்ள ஒருகாட்டில் திவ்யமன ஸ்வேதமிருத் திகை என்னும் வெண்மண் விளைகின்றது மண்ணை வைன தேயன் ஸ்வேத த்வீபத்திலிருந்து இவ்விடம்கொண்டுவந்து போட்டதாகச் சொல்லப்படுகிறது. இந்த திருமண் தக்ஷிண தேசத்திற்கு திவ்யமான திருமண்ணாக வழங்கப்படுகிறது.

## 2. தோண்டனூர்.

**ப்ரபாவம்.**—நம்பி நாராயணன் சந்நிதியும் க்ருஷ்ண ஸ்வாமி சந்நிதியும், 32-படிகளுள்ள மலைமிசை நரஸிம்ம ஸ்வாமிசந்நிதியும் இருக்கின்றன. நரசிம்மஸ்வாமி சந்நிதியில் வடபுறச்சுவரில் சப்தபணமுள்ள உடயவர் திரிதண்டமின்றி ஞானமுத்திரையோடு எழுந்தருளி இருக்கிறார். ஸ்ரீராமானு ஜர் ஜைனர்களை வாதத்தில் வென்று அவர்களுக்கு விஸ்வரூ பத்தை காண்பித்தத் தலம். தொண்டனூர் நம்பி அவதார ஸ்தலம். இங்கிருந்து தான் உடையவர் திருத்துழாய் குறுப்

பின் வழியே திருநாராயணபுரம் சென்று திருநாரணனை ப்ரதிஷ்டித்தது.

மார்க்கமும் வசதிகளும்.—இது French Rocks பிரஞ்சு ராக்ஸ் ஸ்டேஷனுக்கு வடக்கே 8-மைலிலிருக்கிறது. மேல் கோட்டையிலிருந்து தெற்கில் கால்பாடையில் 9-மைலிலும் வண்டிமார்க்கமாய் 13-மைலிலும் இருக்கிறது. இவ்வூருக்குப் போக மேல்கோட்டையிலேயே வண்டிகளைப் பேசிக்கொள்ளவேண்டும், வண்டிக்காரர்கள் வெகுமுருடர்கள், சத்திரம் கிடையாது. சந்நிதியில் சமையல் செய்துகொள்ளலாம் செய்துங்கொடுப்பார்கள். ஜலம் பரிசுத்தமானது.

குறிப்பு.—சமீபத்தில் சாடுகளுக்கிடையிலிருக்கும் ஏரியானது பலவிதத்திலும் சிறந்தது இந்த திவ்யமான ஏரியின் காக்ஷி சகல மதஸ்தர்களும் கண்டுவியந்து ஆநந்தப்படத்தக்கதாயிருக்கின்றது.

## 3. ஸ்ரீரங்கப்பட்டணம்.

ப்ரபாவம்—ஸ்ரீரங்கநாதன், ரங்கநாச்சியார், ப்ரணவ விமானம், காவிரிநதி, கிழக்கே திருமுகமண்டலம், சயன திருக்கோலம், கௌதுமரிஷிக்கும் காவிரிக்கும் ப்ரத்யக்ஷம்.

பெரியதொரு நரசிம்மஸ்வாமி சந்நிதியும் பக்கத்தில் வேறாக விருக்கின்றது.

மார்க்கமும் வசதிகளும்.—இது ஸ்ரீரங்கப்பட்டணம் ஸ்டேஷனுக்கு கிழக்கே நூறுகஜ சமீபத்தில் இருக்கின்றது. வண்டிகளிருப்பினும் தேவையில்லை. எல்லா சௌகரியங்களுமுண்டு.

குறிப்பு:—ஸ்ரீரங்கம் போலவே இந்த பட்டணமும் காவிரிநதியின் இரண்டுகிளைகளுக்கும் மத்தியிலுள்ள ஒருதீவு. இத்தீவின்மேல் பாகத்தில் சிதிலமடைந்த ஒருகோட்டை இருக்கிறது. இந்தக் கோட்டைக்குள் மேல்பாகத்தில் தான் புராதனமானதும் அழக

மைந்ததுமான இந்தஇரண்டு சந்நிதிகளுமிருக்கின்றன. இது முன்பு மைசூர் சமஸ்தானத்திற்கு முக்கிய பட்டணமாயிருந்தது.

இவ்விடத்தில் முக்கியமாய் பார்க்கத் தக்கவைகள்.

(1) திப்புசுல்தான் கட்டியசுமூல் கோபுரங்களுள்ள பெரிய மஸ்ஜீது (2) வெலெஸ்லிவாரா பதி (3) திப்புசுல்தானுடைய வசந்த மாளிகையாகிய டேரியா டௌலட்பாக் 4) ஹைதராலி அவன் மனைவி, டிப்புசுல்தான் இவர்கள் கோரிகளையுடைய லால்பாக் என்னும் சிங்காரத்தோட்டம் (5) காவிரி பச்சிமவாஹினி சங்கம். இது கீழ்கோடியில் 3 மைல் தூரத்திலிருக்கின்றது. இந்தச் சந்நிதிக்கு டிப்புசுல்தான் அநேக தர்மங்களும் கட்டளைகளும் செய்துவைத்திருக்கிறான். இதைகௌதம க்ஷேத்திரமென்று சொல்லப்படுகின்றது. மற்றதிவ்ய தேசங்களிலுள்ளது போல இங்கெழுந்தருளியிருக்கும் அரங்கனுதனுக்கு பிரமனுடேகூடிய உந்திக்கமலமும் பாதங்களுக்கில் ஸ்ரீதேவி பூதேவிகளும் கிடையா. பாதத்தருகில் கௌதம ருஷி, காவேரி இவர்களுடைய சிலாவிக்கிரகங்கள் ப்ரதிஷ்டிக்கபட்டிருக்கின்றன. ஸ்ரீரங்கப்பட்டணம், சிவசமுத்திரம், ஸ்ரீரங்கம் இவைகள் முறையே ஆதிரங்கம், மத்யரங்கம், அந்தயரங்கம் என வழங்கப்படுகின்றன. சிவசமுத்திரத்திற்கு அடியேன் போகவில்லையாகலால் அதைப்பற்றி எழுதுவதற்கில்லை.

## 4. எடத்துரை.

இங்கு காவிரியின் தென்கரையில் ஸ்ரீராமன் சந்நிதி இருக்கின்றது. இவ்விடம் ஓடும் காவிரிநதியை மூன்று புஷ்கரிணிகளில் ஒன்றாகமதித்து அநேக பிராமண தேசாந்தரிகள் ஸ்நானம்செய்யவருகிறார்கள். இவ்விடத்தியபடித்துறை ஒருவாறு திருவையாற்றின் படித்துறை போலிருக்கிறது. காவிரிநதியில் மிகப்பெரிய மத்ஸ்யங்களிருக்கின்றன. இவைகளை சாதமிட்டு வளர்த்து வணங்குகிறார்கள். அக்ஷேரேஸ்வரர் க்ஷேத்திரமாகிய ஒருபெரிய சிவாலயமுமிருக்கின்றது.

இது மைசூருக்கு மேற்கே 22-மைலிலிருக்கிறது. எடத்தூர் என்னும் ரெயில்ஸ்டேஷனுக்கு 2-மையில் தூரம். சகல சௌகரியங்களுமுண்டு

## 5 சிஞ்சேன்கேட்டா.

இங்கு காவிரிநதியின் கரைமேல் சீதாராமன் சந்நிதி இருக்கிறது. இவ்விடத்தில் காவிரிநதியானது விநோதமான பாறை கரடுகளாலாகும் இயற்கை யணையின் மேல் விழுந்தோடுகின்றது. கற்களின் பிரதி பலிப்பினால் சிலஇடங்களில் ஜலம் மஞ்சள் வர்ணமாயும், சிலவிடங்களில் ஜலம் ஓடி வந்து விழும் வேகத்தினால் ஆவியும், நுரையும், புகையும் உண்டாகின்றன இவ்விடத்தில் காவிரியின் காக்ஷி மிக்கவிநோதமாயும் வியக்கத்தக்கதாயுமிருக்கின்றது.

இது எடத்துறைக்கு மேற்கே 8-மைலிலிருக்கிறது. இங்கிருந்து சாலகிராமம் 6-மைல். சகல சௌகரியங்களுமுண்டு.

## 6. மிதுனசாலக்கிராமம்.

ப்ரபாவம் —இங்கு நரசிம்மஸ்வாமி சந்நிதியும் ஸ்ரீமத் உடையவர் திருப்பாத சந்நிதியும் ஸ்ரீபாத தீர்த்த குளமும் இருக்கின்றன.

மார்க்கமும் வசதிகளும்.—இது மைசூருக்கு மேற்கே 36-மைலிலிருக்கிறது. இதற்கு தொண்டனூரிலிருந்து இடத்தளிவழியாய் வந்து சிஞ்சென் கட்டாவில் தங்கி (இங்கு ராமன் சந்நிதியிருக்கிறது தளிகைக்குச் சொன்னால்செய்து கொடுப்பார்கள். காவேரி சமீபத்திலிருக்கிறது.) அங்கிருந்து மிதுனசாலக்கிராமம் போகலாம். சத்திரம் கிடை

பாது. சந்நிதியில் பிரசாதம் கஷ்டம். ½ மைலில் எடாரியில் நரசிம்மன் சந்நிதியும், உடையவர் சந்நிதியுமிருக்கின்றன. ஜலவசதியில்லை. சடினயாத்திரை.

## 7. ராமனுதபுரம்.

ப்ரபாவம்.—சீதா லட்சுமண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத ஸ்ரீராமசந்திரமூர்த்தி, காவேரிநதி, கோகர்பதீர்த்தம், அக்னிபுஷ்கரிணி சௌபரிச்குப்ரத்யக்ஷம் வடசலைசந்நிதி. இது சாலகிராமத்துக்கு மேற்கே கற்சாலை மார்க்கமாய் 12-மைலில் காவிரியின் வடகரை லிருக்கிறது.

## 8. உடுப்பி

ப்ரபாவம்.—இது ஒரு பிரபல்யான கிருஷ்ணஸ்வாமி க்ஷேத்திரம். ஸ்ரீ மத்துவாச் சாரிபர் அவதரித்த ஸ்தலம். அவர் தமது சித்தாந்தத்தை சிஷ்யர்களுக்கு உபதேசித்த இடமும் இதுவே. இது மத்துவ மதஸ்தர்களுக்கு, ஸ்ரீகாசியைப் போன்றது. இங்கு மத்துவர்களுக்கு 8 மடங்களிருக்கின்றன. ஆசார சீலமுள்ள ஒவ்வொரு மத்துவரும் இவ்வுடுப்பி யாத்திரைக்குச் சென்று முத்திராதானம் செய்துகொள்ளாமல் இரார்.

மார்க்கமும் வசதிகளும் —இது மேலைச் சமுத்திரக்கரையிலுள்ளதொரு க்ஷேத்திரம். மங்களூர் ஸ்டேஷனுக்கு வடக்கே 30-மைலிலிருக்கிறது. மோடோர் பஸ்ஸுகள் உண்டு வண்டிகள் சரசமாய்க்கிடைக்கும். மங்களூருக்கும் உடுப்பிக்கும் மத்தியில் ஆறுநதங்க ளிருக்கின்றன வாகையால் ஆங்காங்கு பஸ்ஸுகள் மாறவேண்டும். மங்களூரிலிருந்து கார்கால் மார்க்கமாயும் மோடோர்பஸ்ஸுகள் ஓடுகின்றன. இறங்கி ஏறவேண்டிய ஆவசியகமில்லை, ஆனல் சொஞ்

சமதிக தூரம், Shimoga சிவமொக்காவிலிருந்தும் வண்டி மார்க்கமாய் வரலாம்.

[illegible]ங்களூர் உடுப்பி மார்க்கத்தில் 22-வது மைலில் மூத்பித்திரி என்ற பட்டணமிருக்கின்றது. இங்கு ஜைனர்களின் பிரபலமான தேவாலயம் ஒன்று இருக்கிறது. ஆயிரங்கால் மண்டபமுள்ள ஜைன தேவாலயம் இது ஒன்றே. கார்க்கால் என்ற ஸ்தலத்தில் பழைய பௌத்தாலயம் ஒன்றிருக்கிறது. இதிலுள்ள புத்தர் விக்கிரகம் 45-அடி உயரமுள்ளது. இந்த ஸ்தலத்திலேயே ப்ரபல வேங்கடரமணஸ்வாமி தேவாலயமிருக்கிறது. பிராமணர்களுக்கு ஊட்டுப்பிறைகளிருக்கின்றன. எவ்வளவு காலமிருந்தாலும் அன்னமளிப்பார்கள் சகல வசதிகளும் உண்டு.

## 9. மயிலாப்பூர்

ப்ரபாவம்.—மயூரக்ஷேத்திரம், ஆதிகேசவப்பெருமாள், மயூரநாதன், மயூரவல்லித்தாயார், மயூரவிமானம், மயூர தீர்த்தம், மணிகைரவவாவி என்னும் சந்தான தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், சிவபிரானுக்கு கபாலவிமோசனம் செய்தவர், பிராந்தமுனிவருக்கு ப்ரத்யக்ஷம். ஸ்ரீ பேயாழ்வார் அவதாரஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது சென்னை எழும்பூர் ஸ்டேஷனுக்கு தென்கிழக்கே 2-மைலிலுள்ள திருவல்லிக்கேணிக்கு தெற்கே 2-மைலில் இருக்கின்றது. மோட்டோர் பஸ்ஸுகளும் டிராம்வண்டிகளும் குதிரை மாட்டுவண்டிகளுமுண்டு சத்திரமும் ஹோட்டலுமிருக்கின்றன. சந்நிதியில் தேசாந்தரிகளுக்கு பிரசாதம் கிடைக்கும்.

இச்சந்நிதிக்கு வடக்கே கச்சேரி ரோட்டுக்கடுத்த அரண்டல் தெருவில் ஸ்ரீபேயாழ்வார் அவதரித்த புஷ்கரணி இருக்கிறது. இப்போது அது கூபரூபமாய் விளங்குகிறது. அவசியம் சேவிக்கவேண்

டியது. ஐப்பசிமாதம் சதயநக்ஷத்திரம் இறுதியாகக்கொண்டு பத்து நாள் ஆழ்வாருக்குச்சாற்று மறை உற்சவமும் பங்குனி மாதம் திருவோண நக்ஷத்திரம் இறுதியாகக்கொண்டு பெருமாளுக்கு 10-நாள் பிரமயோத்சவமும் அதிவிபவமாய் நடந்து வருகின்றன.

ஸ்ரீஞானசம்பந்தர் பதிகம்பெற்றுள்ள "கபாலீச்சுரம்" என்னும் பிரபல சிவாலயம் இவ்வூருக்கு திலகம் போல் விளங்குகிறது இதைச்சார்ந்த நீராழி மண்டபத்தோடு கூடிய அழகிய பெரிய தடாகம் கண்ணுக்கு விழாவாயிருக்கும்.

## 10. குசலவபுரி (கோயம்பேடு.)

ப்ரபாவம்—ஸ்ரீவைகுண்டப் பெருமாள், கனகவல்லித் தாயார், சாயாவிமானம், குசலவதீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், விகனசமஹ ரிஷிக்கு ப்ரத்யக்ஷம். இங்கு பெரிய தொருசிவஸ்தலமுமிருக்கின்றது.

ஆனிமாதத்தில் சுவாதி இறுதியாகக் கொண்டு 10-நாள் பிரமோத்சவம், 5-வது நாள் இரவு கருடோத்சவம் வெகுவிமரிசையாய் நடத்தப்பட்டுவருகிறது இத்தலம் வில்லிபாக்கம் ஸ்டேஷனுக்கு தெற்கே 2-மைலிலும் சென்னை-பூந்தமலலிரோட்டில் 6-வது மைலிலுமிருக்கின்றது.

## 11. பூவிருந்த வல்லி.

ப்ரபாவம்.—வரதராஜப் பெருமாள், புஷ்பவல்லித்தாயார், புஷ்பகவிமாநம், கருடபுஷ்கரணி, மேற்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், கஜேந்திர தாசருக்கு ப்ரத்யக்ஷம். திருக்கச்சி நம்பி அவதாரஸ்தலம்.

மார்க்கமும், வசதிகளும்.—இது ஆவடி ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே கற்சாலைமார்க்கமாய் 6-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு, சத்திரமும் ராமாநுஜ கூடமும் ஹோட்டலுமிருக்கின்றன. சென்னைப்பட்டணத்திலிருந்து மோட்டோர் பஸ்ஸுகள் ஓடுகின்றன, சந்நிதியில் தேசாந்

.தரிகளுக்கு பிரசாதம் உண்டு. இதற்கு மேற்கே 2-மைலில் திருமழிசையும் மார்க்கத்தில் முதலியாண்டான் சந்நிதியு மிருக்கின்றன

## 12. பச்சைபெருமாள் கோயில்.

ப்ரபாவம்—பச்சைவாரணப் பெருமாள், அமிர்தவல் லித் தாயார், தர்மவிமானம், தர்ம புஷ்கரிணி, கிழக்கே திரு முகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம். தருமபுத்திரருக்கு ப்ரத்யக்ஷம். முதலியாண்டான் அவதாரஸ்தலம்

மார்க்கமும் வசதிகளும்.—இது பூவிருந்தவல்லிக்கு மேற்கே ஒரு மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு. சத்திர முதலியவையில்லை ஆனால் தங்குவதற்கு சௌகரியமுண்டு. சிறிய கிராமம்.

## 13. திருமழிசை.

ப்ரபாவம்.—மஹீசாரக்ஷேத்திரம், ஜகந்நாதப் பெரு, மாள் திருமங்கைவல்லித் தாயார், ஜகதாநந்தவிமானம், பிருகு தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக் கோலம், பிருகு மஹரிஷிக்கும் மார்க்கண்டேயருக்கும் ப்ரா த்யக்ஷம், திருமழிசையாழ்வார் அவதாரஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும்.—ஆவடிஸ்டேஷனுக்கு தென் மேற்கே 6-மைலிலுள்ள பூவிருந்தவல்லியை யடைந்து பின் னும் 2-மைல் தூரம் மேற்கே சென்றால் இத்தலத்தை யடை யலாம். வண்டிகளுண்டு, ஹோடலில்லை. ராமாநுஜகூடமிருக் கிறது. சந்நிதியில் சொல்லிவைத்தால் பிரசாதம் கிடைக் கும். சென்னையிலிருந்து மோட்டோர் பஸ்ஸுகள் ஓடுகின்றன.

## 14. ஸ்ரீபெரும்பூதூர்.

ப்ரபாவம்—ஆதிகேசவப் பெருமாள், எதிராஜவல்லித் தாயார், அநந்தவிமானம், அநந்ததீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம் பூதகணங்களுக்கும், ஹரித மஹாராஜனுக்கும் ஆஸூரிகேசவாசாரியருக்கும் ப்ரத்யக்ஷம். ஸ்ரீ உடையவர் அவதார ஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும் —இது சென்னைப் பட்டணத்திற்கு மேற்கே 25-மைலிலுள்ள திருவள்ளூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கே கற்சாலை மார்க்கமாய் 11-மைலிலும், சென்னைக்குத் தெற்கே 21-மைலிலுள்ள வண்டலூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே கற்சாலை மார்க்கமாய் 11-மைலிலும் இருக்கின்றது. இரண்டு ஸ்டேஷன்களிலிருந்தும் வண்டிகளுண்டு, சென்னையிலிருந்து மோட்டார் பஸ்வண்டிகள் ஓடுகின்றன. சத்திரங்களும் மடங்களுமிருக்கின்றன. சிவபிரான் கட்டளைப்படி பூதங்களால் நிர்மாணஞ் செய்யப்பட்டதால் இதற்கு பூதபுரியென்று பேயராயிற்து.

சித்திரை மாதம் திருவோண நக்ஷத்திரம் இறுதியாகக் கொண்டு 10-நாள் பெருமாளுக்கு பிரமோத்சவமும் ஷை மாதம் திருவாதிரை நக்ஷத்திரம் இறுதியாகக்கொண்டு 10-நாள் உடையவர் சாத்துமுறை உத்சவமும் பிரபலமாய் நடந்து வருகின்றன.

## 15. மதுரமங்கலம்

ப்ரபாவம்.—ஸ்ரீவைகுண்டப்பெருமாள் சந்நிதி. எம்பார் அவதாரஸ்தலம்.

இது திருவள்ளூருக்கு மேற்கிலுள்ள கடம்பத்தூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கே 12-மைலிலும், ஸ்ரீபெரும்பூதூரிலிருந்து 9-மைலிலுமிருக்கிறது. மாட்டுவண்டிகள் கிடைக்

கும். சௌகரியங்கள் கிடையா. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

## 16. கூரம்.

ப்ரபாவம்.—ஆதிகேசவப் பெருமாள் சந்நிதி. கூரத்தாழ்வார் அவதார ஸ்தலம்.

இது காஞ்சீபுரத்துக்கு மேற்கிலுள்ள, ஈஞ்சம் பாக்கம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஒருமைலிலிருக்கிறது. காஞ்சீபுரத்துக்கு வடமேற்கே 6-மைலிலிருக்கின்றது சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும், சௌகரியங்களுண்டு.

## 17. வேளுக்கைச் சிங்கப்பெருமாள் கோயில்.

ப்ரபாவம்.—அழகிய சிங்கப்பெருமாள், அம்ருதவல்லித் தாயார், ஹேமவிமானம், சிம்ம தீர்த்தம், மேற்கே திருமுக மண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், ப்ரஹ்லாதாழ்வாருக்கு ப்ரத்யக்ஷம்.

இது சின்னகாஞ்சீபுரம் விளக்கொளி கோயிலுக்குத் தெற்கே ½-மைலிலிருக்கிறது. "மன்னுமதிட்கச்சி வேளுக்கையாளரியை" என்னும் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம் இத்திருப்பதிக்கே என்பர், இவ்வூரிலுள்ளார்.

## 18. பச்சை வண்ணர் கோயில்.

ப்ரபாவம்.—பச்சைவண்ணப்பெருமாள், மரகதவல்லித் தாயார் மரகதவிமானம், பிருகுதீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், பிருகு மஹருஷிக்கு ப்ரத்யக்ஷம்

இது பெரிய காஞ்சீபுரத்தில் பவழவண்ணர் சந்நிதி வீதியின் மேற்புறத்திலிருக்கிறது. (காஞ்சீபுரத்தைப் பார்க்க).

## 19. திருமுக்கூடல்

ப்ரபாவம்:—வேங்கடேசப் பெருமாள், அலர்மேல் மங்கைத்தாயார், சேஷவிமாநம், திருமுக்கூடல் தீர்த்தம், வடக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், பிருகு மார்க்கண்டேய முனிவர்களுக்கும், தொண்டைமான் சக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷயம். பாலாறு, செய்யாறு, வேகவதி என்னும் மூன்று நதிகள் சேருமிடமாகையால் இதற்கு திருமுக்கூடல் எனப்பெயராயிற்று. இங்கு ஸ்நாநம் விசேஷம்.

மார்க்கமும் வசதிகளும்—செங்கற்பட்டுக்கு வடமேற்கிலுள்ள பழைய சீவரம் ஸ்டேஷனுக்கு தென்மேற்காக $1\frac{1}{2}$மைலிலிருக்கிறது. கஞ்சி வரதராஜப்பெருமாள் சங்கராந்தி பரிவேட்டை உத்சவமாக இங்கு எழுந்தருளுவார். அதிக அழகான உற்சவம்.

## 20. மதுராந்தகம்.

ப்ரபாவம்.—கோதண்ட ராமஸ்வாமி, ஜானகிப்பிராட்டியார், மந்திரவிமாநம், மந்திரவாவி தீர்த்தம். மகிழவிருக்ஷம், தெற்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், விபாண்டக மஹரிஷிக்கு ப்ரத்யக்ஷம். ஸ்ரீமத் உடையவர் பெரியநம்பிகளிடம் பஞ்ச சம்ஸ்காரம் பெற்றுக்கொண்ட தலம்.

மார்க்கமும் வசதிகளும்—இது செங்கற்பட்டுக்குத் தெற்கே 15-மைலிலுள்ள மதுராந்தகம் ஸ்டேஷனுக்கு வடமேற்கே கற்சாலைமார்க்கமாய் ஒரு மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு, சத்திரமும் ஹோட்டல்களுமிருக்கின்றன. சந்நிதியில் ப்ரசாதம் கிடைக்கும். ஆனிமாதத்தில் புனர்பூசநக்ஷத்திரத்தில் துவஜாரோகணம். ஆறுவது நாள் காலை கருடோத்ஸவம்

## 21. மலவையாவூர்.

ப்ரபாவம்.—ஸ்ரீப்ரசன்ன வேங்கடேசப் பெருமாள், அலர்மேல்மங்கைத் தாயார், ஆனந்த விமானம், ஸ்வாமி புஷ்கரிணி, பாண்டவதீர்த்தம், சேஷதீர்த்தம், கஜேந்திர தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், பிருகு ஹரிஷிக்கும் சுப்பிரமண்யருக்கும் ப்ரத்யக்ஷம் மலைமேல் சந்நிதி.

குறிப்பு: - பாண்டியநாட்டிலுள்ள ஸ்ரீவைகுண்டம் என்னும் திவ்ய தேசத்திலிருந்து அக்பர் மந்திரியாகிய தோடர்மால் என்பவரால் கொள்ளையடித்துக் கொண்டுவரப்பட்ட கள்ளப்பிரான் உத்சவமூர்த்தி இங்கு எழுந்தருளி இருக்கிறார். இவருக்கு தனியே சித்திரைமாதத்தில் திருவோணம் இறுதயாகக்கொண்டு 10-நாள் ப்ரமோத்சவம் நடத்தப்பட்டுவருகின்றது. வேங்கடேசப் பெருமாளுக்கு புரட்டாசியீ திருவோணம் இதிறுயாகக்கொண்டு 10நாள் பிரமோத்சவம்.

இது செங்கற்பட்டுக்குத் தெற்கே 8-மைலிலுள்ள படாளம் ஸ்டேஷனுக்கு மேற்கே கற்சாலைமார்க்கமாய் 4-மைலிலிருக்கிறது. இராமாநுஜகூட மிருக்கிறது. சந்நிதியில் ப்ரசாதம் கிடைக்கும்.

## 22. உத்திரமேரூர்.

ப்ரபாவம்:—ஸ்ரீ சௌந்தர்ய வரதராஜப் பெருமாள், ஆனந்தவல்லித்தாயார், ஷண்ணவதிவிமானம், ப்ரம்மதீர்த்தம், லக்ஷ்மி தீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், பஞ்சபாண்டவர்களுக்கு ப்ரத்யக்ஷம்.

ரங்கநாதன், வைகுண்டநாதன் சந்நிதிகளுமிருக்கின்றன. (ஷண்ணவதிவிமானம் 96 விமானங்களடங்கியது) வடகலை சந்நிதி.

மார்க்கம் - இது செங்கற்பட்டிலிருந்து மேற்கே வந்த வாசிக்குச் செல்லும் கற்சாலைமார்க்கத்தில் 18-வது மைலிலிருக்கிறது. லோகல்பண்டு சத்திரமிருக்கிறது. சந்நிதியில் ப்ரசாதம் கிடைக்கும்.

## 23 சிங்கிரிகோயில்.

ப்ரபாவம்:—(மூலவர், பதினாறு திருக்கரங்களோடு கூடிய) உக்கிர நரசிம்மஸ்வாமி (உத்சவர்) ப்ரஹ்லாதவரதர், கனகவல்லித்தாயார், பாவனவிமானம், பிருகுபுஷ்கரிணி, வீற்றிருந்த திருக்கோலம் மேற்கே திருமுகமண்டலம். ப்ரஹ்லாதனுக்கும் பிருகு ஜைமினி வசிஷ்டாதி ருஷிகளுக்கும் இந்திரன் காளி கணபதிமுதலிய தேவதைகளுக்கும் நிமிரக்கிரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்:—இது Cuddalore N.T. திருப்பாபுலியூர் ஸ்டேஷனுக்கு வடக்கே புதுச்சேரி கற்சாலை மார்க்கமாய் 9-மைலிலும், புதுச்சேரியிலிருந்து தெற்கே 4-மைலிலும் வில்லியனூர் ஸ்டேஷனுக்கு 4-மைலிலும் இருக்கிறது. வண்டிகளும் ஹோடல்களு மிருக்கின்றன, சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

இரண்யனை மடியின்மீது வைத்துக்கொண்டு சம்ஹரித்த சமயமாதலால் மூலவர் 16-திருக்கரங்களுடன் மஹா உக்கிரரூபமாய் எழுந்தருளியிருக்கிறார். அபூர்வமான சேவை,

## 24. சிங்கப்பெருமாள் கோயில்

ப்ரபாவம்.—பாலகிரி, உக்ரநரசிம்மஸ்வாமி, ப்ரஹ்லாதவரதர் அஹோபிலவல்லித்தாயார், ப்ரணவகோடி

விமானம், சித்தபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், ஜாபாலி மஹருஷிக்கு ப்ரத்யக்ஷம்

**மார்க்கமும் வசதிகளும்.**—இது செங்கற்பட்டுக்கு வடக்கே 5-மைலிலுள்ள சிங்கப்பெருமாள்கோயில் ஸ்டேஷனுக்குக் கிழக்கே ½-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு, சத்திரமிருக்கிறது. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்

## 25. மீஞ்சூர்.

**ப்ரபாவம்.**—வரதராஜப்பெருமாள், பெருந்தேவித்தாயார் புண்யகோடிவிமானம் மௌஞ்சாரணியம், குசஸ்தலி நதி, அநந்தசரஸ்ஸு, கிழக்கெதிருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், ராமபாதருக்கும் யாக்கியவல்கியருக்கும் ப்ரத்யக்ஷம்.

**மார்க்கமும் வசதிகளும்**—இது சென்னைக்கு வடக்கே 17-மைலிலுள்ள மீஞ்சூர் ஸ்டேஷனுக்கு மேற்கே ½-மைலிலிருக்கிறது. எல்லாசௌகரியங்களுமுண்டு.

## 26. பொன்னேரி.

**ப்ரபாவம்.**—கரிக்ருஷ்ணப் பெருமாள் சுந்தரவல்லித்தாயார், சுந்திரவிமாநம், சுந்தரபுஷ்கரிணி, அரணிநதி, வடக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், பரத்துவாசருஷிக்கு ப்ரத்யக்ஷம்.

**மார்க்கமும் வசதிகளும்.**—இது M. S. M. Ry. பொன்னேரி ஸ்டேஷனிலிருந்து கற்சாலைமார்க்கமாய் 2-மைலிலிருக்கிறது, வண்டிகளுண்டு சத்திரமும் ஹோட்டலுமிருக்கின்றன. இங்கு சித்திரை மாதத்தில் கருடவாஹனனுக்கும் விருஷபவாஹனனுக்கும் சந்திப்பு உற்சவம் நடக்கிறது.

## 27. தும்பூர்.

ப்ரபாவம்.—நரஸிம்மஸ்வாமி, கரிமாணிக்கப் பெருமாள், லட்சுமிதேவி, தும்புருதீர்த்தம், சுவர்ணமுகிநதி, நின்றதிருக்கோலம் தும்புருவுக்கும் நாரதருக்கும் ப்ரத்யக்ஷம்.

இது M.S.M.Ry. நாயுடுபேட்டை ஸ்டேஷனுக்கு வடக்கே கற்சாலைமார்க்கமாய் 2-மைலிலிருக்கிறது.

## 28. நாகலாபுரம்.

ப்ரபாவம்.—வேதநாராயணஸ்வாமி, வேதவல்லித்தாயார், மச்சதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், பிரமதேவருக்கு ப்ரத்யக்ஷம். இத்தேவாலயத்தில் பங்குனி முதல்நாள் மாலை 5½-மணிக்கு சூரியகிரணம் வேதநாராயண ஸ்வாமிபாதத்திலும் இரண்டாம் நாள் நாபியின் பேரிலும் மூன்றாம் நாள் திருமுகமண்டலத்திலும் தோன்றுகின்றது. அத்யாச்சரியம்.

மார்க்கமும் வசதிகளும்.—M. S. M. R. திருவள்ளூர் ஸ்டேஷனிலிருந்து வடக்கே செல்லும் கற்சாலைமார்க்கமாய் 16-மைலிலுள்ள ஊத்துக்கோட்டையை யடைந்து பின்னும் மேற்கே திரும்பி 6-மைல்தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். சென்னையிலிருந்து பொழல் (Redhills) சோழவரம், பெரியபாளையம் ஊத்துக்கோட்டை கற்சாலைமார்க்கமாய் நாகலாபுரத்துக்கு மோட்டார் பஸ் ஸுகள் ஓடுகின்றன.

## 29. திருத்தணிகை.

ப்ரபாவம் - கீழ்திருத்தணிகை - விஜயராகவஸ்வாமி. சீதாதேவி, விஜயகோடி விமானம், நந்த நந்தினி தீர்த்தம்,

நந்திநதி, கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், சதாசிவ மூர்த்தியுடன் சுப்பிரமண்யருக்கு ப்ரத்யக்ஷம்.

இப்போது சுப்பிரமண்ய ஸ்தலமாக விருக்கும் திருத்தணிகை முன்பு விஷ்ணுஸ்தலமாயிருந்ததாகச் சொல்லப்படுகிறது. இதற்கு அனேக அத்தாக்ஷிகள் இன்னுமிருக்கின்றன வென்றும் சொல்லுகிறார்கள். விஷ்ணுவாம்ச பூதரான முருகக்கடவுளை தரிசிக்கும் பக்தகோடிகள் ஆங்கு அவைகளைக் கண்டு நன்குணரலாம்.

இது M. S. M R. திருத்தணிகை ஸ்டேஷனுக்கு கிழக்கே கற்சாலைமார்க்கமாய் 2-மைலில் நந்திநதிக் கரைமேலிருக்கிறது, எல்லாவசதிகளும் உண்டு.

## 30. நாராயணவனம்.

ப்ரபாவம்.—கல்யாண வேகங்டபதி, பத்மாவதி, பத்மஸரசு, கல்யாணவிமானம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், ஆகாச மஹாராஜனுக்கு ப்ரத்யக்ஷயம், கிருதயுகத்தில் இராமபிரானை மணம் செய்துகொள்ள விரும்பிய சாயாசீதை அவர் வாக்களித்தவண்ணம் இங்கு ஆகாசராஜனுக்கு பத்மாவதி என்னும் பெண்ணுகப் பிறந்து திருவேங்கடமுடையானை பாணிக்கிரஹணம் செய்து கொண்ட ஸ்தலம்.

மார்க்கமும் வசிதிகளும்.—ரேணுகுண்டா ஸ்டேஷனுக்குத்தெற்கே 14-மைலிலிருக்கும் புத்தூர்ஸ்டேஷனிலிறங்கி தென்கிழக்காக 3-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். சத்திரமில்லை, சந்நிதியில் பிரசாதம் கிடைக்காது, வண்டிகளுண்டு.

## 31. திருச்சானூர்.

ப்ரபாவம்—வேங்கடாசலபதி, அலர்மேல் மங்கைத் தாயார், ஸ்ரீநிவாசவிமாநம், பத்மசரசு, சொர்ணமுகி நதி, கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், சூரியனுக்கும், தேவமுனிக்கணங்களுக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது ரேணுகுண்டா ஸ்டேஷனிலிருந்துதென்மேற்கே கற்சாலைமார்க்கமாய் 5-மைலிலும், திருச்சானூர் ஸ்டேஷனிலிருந்து தெற்கே 2-மைலிலுய, (இந்த ஸ்டேஷனி லிறங்குவது உசிதமன்று,) திருப்பதி ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே 3-மைலிலுமிருக்கின்றது, வண்டிகளுண்டு, சத்திரங்கள் பலவிருக்கின்றன. சந்நிதியில் ப்ரசாதம்விசேஷம்.

## 32. பள்ளி கோண்டா

ப்ரபாவம் ஸ்ரீரங்கநாதன், ரங்கநாயகி, ப்ரணவாகார விமானம், வ்யாசபுஷ்கரிணி, க்ஷீரநதி, சேஷசயனம், கிழக்கே திருமுகமண்டலம், அம்பரீஷ மகாராசனுக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது M. S. M. Ry. குடியாத்தம் ஸ்டேஷனுக்கு தெற்கே கற்சாலைமார்க்கமாய் 2-மைலில் பாலாற்றின் தென்கரையிலிருக்கிறது. வண்டிகளுண்டு, இராமாநுஜ கூடமிருக்கிறது. சந்நிதியில் ப்ரசாதம் கிடைக்கும்.

## 33. சிங்கராய கோண்டா.

ப்ரபாவம்—நரசிம்மஸ்வாமி, இலட்சுமிதேவி, பவநாசினி தீர்த்தம், க்ஷீரநதி, யோகாசனம், கிழக்கேதிருமுக மண்டலம், நாரதருக்கும் சாபலிக்கும் ப்ரத்யக்ஷம். ஸ்ரீரா

மன் சந்நிதியும் வராஹஸ்வாமி சந்நிதியுமிருக்கின்றன பாலாறு மண்ணாறு சங்கமும்.

மார்ககமும் வசதிகளும்.—இது சிங்கராய கொண்டா ஸ்டேஷனுக்கு தெற்க்கே கற்சாலை மார்க்கமாய் $1\frac{1}{2}$-மைலில் ஊமிசையிருக்கிறது. சத்திரமுண்டு. இதற்கு மேற்கே 8-மைலில் கந்துகூரும் கிழக்கே 4-மைலில் சமுத்திரமு மிருக்கின்றன.

## 34. பவானி.

இது ஈரோட்டுஸ்டேஷனுக்கு வடக்கே கற்சாலைமார்க் கமாய் 8-மைலிலிருக்கிறது. பவானி காவிரியில் சங்கமாகு மிடத்தில் வரதராஜஸ்வாமி சந்நிதியிருக்கின்றது. பாடல் பெற்ற திருநணு என்றும் சிவஸ்தலமுமிதுவே. சித்திரையில் இருவருக்கும் பிரம்மோத்ஸவங்கள் நடைபெருகின்றன. அதிரமணீயமான ஸ்தலம்

## 35. காரமடை.

இது ஒரு புராதன விஷ்ணுஸ்தலம். ஸ்வயம்பு ஸ்தல மென்று சொல்லுகிறார்கள். பெருமாளுக்கு திருமுக மண்டலம் மாத்திரமே, சேவையாகிறது. மற்றவை பூமிக்குளி ருக்கிறதாக ஐதிஹ்யம். ரங்கநாதன் - வெட்டாத்தம்மாள், துலசிதேவி என இரண்டு நாச்சிமார்களுளர். கிருஷ்ண தீர்த்தம், தெங்கலை சந்நிதி, இங்கு நம்பியாருக்கு முதல்தீர்த் தம். கோயம்பத்தூர் - மேட்டுபாளையம் லையன்-- காரமடை ஸ்டேஷனுக்கு மேற்கே $\frac{1}{2}$மைலிலிருக்கிறது. சத்திரமும் ஹோட்டலுமிருக்கின்றன.

## 36. குறையலூர்.

ப்ரபாவம்.—லக்ஷ்மிநரசிம்மன் சந்நிதி, திருமங்கை

யாழ்வார் அவதார ஸ்தலம். சந்நிதிமிகச்சிறியது. உத்சவ விக்ரஹாதிகள் ஒன்றுமில்லை.

மார்க்கமும் வசதிகளும்.—இது திருவாலித்திருநகரிக்கு தென்கிழக்கே ஒருமைலிலிருக்கிறது. தைஅமாவாசையினன்று ஆழ்வார் இங்கு எழுந்தருளுவர். இது திருநகரியைச் சேர்ந்தது, வயல் மத்தியிலிருக்கிறது.

## 37. ஸ்ரீமுஷ்ணம்.

ப்ரபாவம்.—ஆதிவராகப் பெருமாள், அம்புஜவல்லித் தாயார், வாமநவிமாநம், நித்யபுஷ்கரிணி, மேற்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், அஶ்வத்த நாராயணனுக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது சிதம்பரம் ஸ்டேஷனுக்கு மேற்கே கற்சாலைமார்க்கமாய் 24-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு. சத்திரம் ஹோட்டல், கிளப்புகளிருக்கின்றன. சந்நிதியிலும் பிரசாதம் கிடைக்கும்.

குறிப்பு.—இது அஷ்டசுயம்பு ஸ்தலங்களில் ஒன்று. இங்கு பெருமாள் வராகரூபியாதலால், அவருக்குக்கோரைக்கிழங்கு லட்டு அமுது செய்யப்பண்ணி வேண்டியவர்களுக்கு விலைக்கும் கொடுக்குறார்கள். இத்தலத்துக்குத் தென் கிழக்கே 16-மைலில் காட்டுமன்னார்கோவிலும், வடமேற்கே 12-மைலில் ப்ரபல சிவஸ்தலமாகியவிருத்தாசலமுமிருக்கின்றன.

## 38. காட்டு மன்னார்கோயில்

ப்ரபாவம்.—வீரநாராயணப் பெருமாள், செங்கமல வல்லித்தாயார், புண்ணிய விமாநம், வேததீர்த்தம், கிழக்கே

திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம். மதங்கமஹரி ஷிக்கு ப்ரத்யக்ஷம், ஸ்ரீமந்நாதமுனிகள், ஸ்ரீ ஆளவந்தார் அவதாரஸ்தலம்.

**மார்க்கமும் வசதிகளும்.**—சிதம்பரத்துக்கு தென் மேற்கே மைலிலிருக்கும். குமராட்சிமார்க்கமாய் 14-மைலி லுள்ள லால்பேட்டையை யடைந்து தெற்கே திரும்பி 2-மைல் தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். வட மேற்கே 12-மைலில் ஸ்ரீமுஷ்ணமும், மேற்கே 8-மைலில் குருகைக்காவலப்பன் கோவிலும் இருக்கின்றன. சிதம் பரத்தினின்றும் வண்டிகளுண்டு. ஸ்ரீ முஷ்ணத்திற்குத் தபால் வண்டிகிடைக்கும். சத்திரமும் ஹோட்டலுமிருக் கின்றன. சந்நிதியிலும் பிரசாதம் கிடைக்கும்.

## 39. குருகைக்காவலப்பன் கோயில்.

**ப்ரபாவம்.**—ஸ்ரீராமன் சந்நிதி, ஸ்ரீமந்நாத முனிகள் திருநாட்டுக் கெழுந்தருளிய தலம். குருகைக் காவலப்பனு க்கு திருவவதார ஸ்தலம் திருக்குருகூராயினும் அவர் தமது ஆசாரியர் திருப்பள்ளியில் கைங்கர்ய நிரதராய் இங்கு வர்த்தித்திருந்தாராகையால் குருகைக்காவலப்பன் கோயில் என்று பிரசித்தமாயிற்று.

**மார்க்கமும் வசதிகளும்.**—சிதம்பரத்துக்கு தென் மேற்கே 16-மைலிலிருக்கும் காட்டுமன்னார் கோயிலையடை ந்து பின்னும் 6-மைல் தென்மேற்கே கற்சாலைமார்க்கமாய்ச் சென்றால் இத்தலத்தை அடையலாம். தபால்தண்டி யுண்டு சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

## 40. பாபவிநாசம்.

**ப்ரபாவம்.**—பாபவிநாசப் பெருமாள், பங்கயவல்லி நாச்சியார், பாபவிநாசவிமாநம், புண்டரீகபுஷ்கரிணி, குட

முருட்டிநதி, கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், சிவபிரானுக்கும் ஜயம் கொண்ட சோழனுக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது கும்பகோணத்திற்கு மேற்கே 9-மைலிலுள்ள பாபவிநாசம் ஸ்டேஷனிலிருந்து வடக்கே $\frac{1}{2}$ மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு, சத்திரமும் ஹோட்டலுமிருக்கின்றன. சந்நிதியிலும் பிரசாதம் கிடைக்கும். இதற்கு வடக்கே $1\frac{1}{3}$ மைலில் கபிஸ்தலமிருக்கிறது. ஆறுகளுக்குப் பரிசல்களுண்டு.

## 41. மண்டங்குடி.

ப்ரபாவம்.—கல்யாண ரங்கநாதன் சந்நிதி, தொண்டரடிப் பொடியாழ்வார் அவதாரஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது கபிஸ்தலத்துக்கு வடகிழக்கே 4-மைலிலும், புள்ளம் பூதங்குடிக்கு மேற்கே 1-மைலிலுமிருக்கிறது. பாபநாசம் ஸ்டேஷனிலிருந்து கபிஸ்தலம் 2-மைல். வண்டிகளில்லை, சத்திரமில்லை, பிரசாதம் பூச்சியம். இது வெகு சிறிய கிராமம். சந்நிதியும் குறுகியது.

## 42. செங்க நல்லூர்.

ப்ரபாவம்.—ஸ்ரீநிவாசன் சந்நிதி. பெரியவாச்சான் பிள்ளை அவதாரஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது திருவெள்ளியங்குடிக்கு வடக்கே ஒரு மைலிலிருக்கிறது. இது ஒரு சிறியகிராமம். வரப்பு மார்க்கமாகையால் வண்டிபோகாது, திருவெள்ளியங்குடி மார்க்கத்தைக் காண்க.

## 43. இராஜமன்னார் கோயில்.

ப்ரபாவம்.—இராஜகோபாலன், செங்கமலவல்லி நாச்சியார், ஸ்வயம்புவிமாநம், அரித்ராநதி புஷ்கரிணி, சங்க தீர்த்தம், சக்ரதீர்த்தம், கிருஷ்ணதீர்த்தம், ருக்மணிதீர்த்தம், கஜேந்த்திரதீர்த்தம், க்ஷீரசாகரதீர்த்தம, கோப்ரளய தீர்த்தம், சம்பகாரண்யக்ஷேத்ரம், கிழக்கே திருமுக மண்டலம், நின்றதிருக்கோலம், கோபில கோப்ரளய மகாமுனிக்கு ப்ரதயக்ஷயம்.

மார்க்கமும் வசதிகளும்—இது நீடாமங்கலத்திற்குத் தெற்கே 8-மைலிலிருக்கும் மன்னார்குடி ஸ்டேஷனிலிருந்து மேற்கே கற்சாலை மார்க்கமாய் ஒரு மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு. சத்திரமும் இராமாநுஜகூடமும் ஹோட்டலுமிருக்கின்றன. சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும். இராஜகோபாலன் ஒரு காதில் குண்டலமும் மற்றொருகாதில் கம்மலு மணிந்திருப்பதைக்கவனிக்கவும்.

குறிப்பு:—பங்குனி மாதத்தில் ரோஹிணி இறுதியாகக் கொண்டு 18-நாள் பிரமோத்தவம் 12-வது.நாள் வெண்ணெய் தாழி சேவைபிரபலமான உத்ஸவம் 17-ம் நாள் இரதோத்சவம்.

## 44. குணசேகரம்.

ப்ரபாவம்.—ஸ்ரீநிவாசப்பெருமாள், அலர்மேல்மங்கைத்தாயார். அஷ்டாங்க விமாநம், பிநாக புஷ்கரிணி, அகண்டகாவேரி, கிழக்கேதிருமுக மண்டலம் நின்றதிருக்கோலம், குணசில மஹாருஷிக்கு ப்ரத்யக்ஷம்; இத்தலம் திருச்சிநாப்பள்ளி ஜில்லாவுக்கு திருவேங்கடம் என்னும் திருப்பதிப்போல் விளங்குகின்றது.

மார்க்கமும் வசதிகளும்.—இது திருச்சிகோட்டை ஸ்டேஷனுக்கு 9-மைலிலிருக்கும் எலமனூர் ஸ்டேஷனி

லிருந்து வடக்கே 2-மைலிலிருக்கிறது. ஸ்ரீரங்கத்திலிருந்து கொள்ளிடம் வடகரையே 9-மைல் மேற்கே சென்றால் இத்தலத்தை யடையலாம். வண்டிகள் கிடையா, ஆற்றுக்கு பரிசல் உண்டு, சத்திரங்களில்லாவிடினும் சௌகரியமுண்டு சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும்.

## 45 விஜயநாராயணம்.

ப்ரபாவம்.—அழகியமன்னர், மன்னாட்சி, விஜயகோடி விமானம், விஜயதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், விஜயனுக்கும், தேவேந்திரனுக்கும் கௌ... மருக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்.—திருநெல்வேலிஜூலம் ஸ்டே... ஷனுக்கு தெற்கே 18-மைலிலிருக்கும் நாங்குநேரி (வானமாமலை) யை அடைந்து பின்னும் தென்கிழக்கே கற்சா... மார்க்கமாய் 12-மைல்தூரம் சென்றால் இத்தலத்தை அடை... யலாம். எல்லா சௌகரியஙுமுண்டு.

## 46. பிரமதேச மன்னார்கோயில்

ப்ரபாவம்.—வேதநாராயணப் பெருமாள், ராஜமன்னார், வேதவல்லித்தாயார், வேத விமானம், அகஸ்தியதீர்த்தம். கிழக்கே திருமுகமண்டலம். நின்றதிருக்கோலம். அகஸ்தியருக்கும், குலசேகராழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம்.

இது அம்பாசமுத்திரம் ஸ்டேஷனுக்கு வடக்கே 1-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு. சத்திரமில்லை ஹோட்டலில்லை, சந்நிதியில் பிரசாதம் கிடைக்கும். அம்பாசமுத்திரத்திலிருந்து பதார்த்தங்கள் கொண்டுபோய் மண்டபங்களில் தளிகை செய்து கொள்ளலாம். கிழக்கே ஒரு மைலில் பிரமதேச மிருக்கிறது. இது பெரிய ஷேத்ர...

கிராமம். எல்லாசௌகரியகளுமுண்டு. அம்பாசமுத்திரத்தில் 3-சத்திரங்களும் சில ஹோட்டல்களுமிருக்கின்றன.

குறிப்பு:—பிரமதேசமன்னார்கோயில் குலசேகராழ்வார் திருநாட்டுக்கு எழுந்தருளினதலம். ஆழ்வாருக்குத் தனிச்சந்நிதியும் மாசிமாதத்தில் பிரமோத்சவமு முண்டு. திருக்கூடலிலும் திருக்கோட்டியூரிலும் உள்ளதுபோல விமானத்தின்மிசை வீற்றிருந்த கோலமாயும் அதற்குமேலே கிடந்ததிருக் கோலமாயும் பெருமாள் சேவைசாதிக்கின்றனர். தசாவதார சந்நிதி, ரங்கநாதன் சந்நிதி, மணவாளமாமுநி சந்நிதி, இவைகள் தனித்தனியாயிருக்கின்றன. இது ஒரு பெரிய அழகான சந்நிதி.

## 47. சேது மாதவம் (இராமேச்சுரம்)

ப்ரபாவம்:—சேதுமாதவப் பெருமாள் கருணைவல்லித் தாயார், ஆனந்த விமானம், மதாவதீர்த்தம், தநுஷ்கோடி தீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம், புஜங்க சயனம், பிரம ருத்திரேந்திராதி தேவர்களுக்கும், கருணாநிதி என்னும் பாண்டியனுக்கும் ப்ரத்யக்ஷம். சைவாராதனம்.

மார்க்கமும் வசதிகளும்:—இது ராமேச்வர சிவாலயத்தின் முதல் பிரகாரத்தி லிருக்கிறது ராமேஸ்வரம் ஸ்டேஷனுக்கும் ஆலயத்துக்கும் ½-மைல்தூரம், இதற்கு வடக்கே ஒரு-மைலில் கந்தமாதன பர்வதம் என்னும் மணல்குன்றின் மிசை ஸ்ரீராமமூர்த்தியின் பாதங்களையுடைய ஒருசிறிய சந்நிதியிருக்கிறது. கிழக்கே 18-மைலில் திருவணை என்னும் சேதுஸ்நான கட்டம் இருக்கிறது. மஹோததியும் ரத்நசாகரமும் கூடுமிடம். இரண்டுசமுத்திரங்கள் கூடுமிடத்திற்கு சேது வென்றுபெயர்.

இது தனுஷ்கோடி ஸ்டேஷனுக்கு சமீபத்திலிருக்கிறது.

இராமேஸ்வரத்திலும் தநுஷ்கோடியிலும் சத்திரங்களும் ஒட்டல்களுமிருக்கின்றன. வண்டிகளுண்டு.

குணநிதி என்னும் பாண்டியன் தன்தேவி விந்தியாவலியோடு புத்ரார்த்தியாய் சேதுயாத்திரைச்செய்யச் சென்று அவ்விடத்தில் ஓர்காரணத்தால் அவதரித்திருந்த லக்ஷ்மிதேவியைப் பெண்ணாகக்கொண்டு வளர்த்து வருகையில் ஒருநாள் விஷ்ணுமூர்த்தி ஒரு சைவவேதியராய்வந்து, பூந்தோட்டத்தில் புஷ்பாசயநஞ்செய்து கொண்டிருந்த கன்னிகையைக் கைபிடித்திழுக்க அவள் முறையிட்டதால் அரசன் அவ்வேதியரை விலங்கிட்டு சிறையில் வைத்தனன். விஷ்ணுமூர்த்தி பாண்டியன் கனவில் தோன்றி அவனுக்கு தரிசனம் தந்து தனனை அறிவிக்க அவனும் தனது கன்னிகையாகிய திருமகளை திருமாலுக்கு திருமணம் செய்வித்தனன். திருமகள்கேள்வனும் அரசனுக்கு வேண்டிய வரமளித்து அவன் பிரார்த்தித்தபடி இங்கு சேதுமாதவர் என்றும் திருநாமத்தோடு எழுந்தருளி யிருக்கின்றனர்.

## 48 திருவஞ்சிக்களம்.

ப்ரபாவம்—கண்ணன் நாராயணன் சந்நிதி, குசலேகராழ்வார் அவதாரஸ்தலம். கண்ணன் சந்நிதி மிகப்பரபலமாகயிருந்தும் ஆழ்வார் விக்ரஹம் தனியாக ப்ரதிஷ்டையில்லை.

மார்க்கமும் வசதிகளும்:—S. I. R. சோரனூர்-சொர்ச்சிலைனிலுள்ள இருஞாலக்கடை ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே 4-மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம். இது ஒரு ப்ரபலமான பாடல்பெற்றுள்ள சிவஸ்தலம். வண்டிகளுண்டு, சத்திரமிருக்கிறது. பிராமணருக்கு ஊட்டுபிரையுண்டு.

## 49. ஜனார்த்தனம்.

ப்ரபாவம்.—ஜனார்த்தனஸ்வாமி, ஸ்ரீதேவி, வேதா லோதவிமானம், சக்ரதீர்த்தம், பிரமதீர்த்தம், ஜலநிதி, ஆல விருக்ஷம், கிழக்கே திருமுகமண்டலம். நின்றதிருக்கோலம், பிரமதேவருக்கும் சுப்பிரயமாசு என்னும் அரசனுக்கும் ப்ரத்யக்ஷம். சந்நிதிக்கு பின்புறத்தில் சமுத்திரம். இதை தக்ஷிணா கயா என்பர்.

மார்க்கமும் வசதிகளும்.—இது S. I. R. கொல்லம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து தெற்கே தோடு (Canal)மார்க் கமாய் 18-மைலிலிருக்கிறது கொல்லம் - திருவநந்தபுரம் லைனிலுள்ள, வர்க்கலை ஸ்டேஷனுக்கு கிழக்கே 1½-மைலிலி ருக்கின்றது. வண்டிகளுண்டு சத்திரமிருக்கிறது. ஹோட்ட லில்லை. பிராமணர்களுக்கு ஊட்டுப்பிரையுண்டு. மற்றவர் களுக்குப் பிரசாதம் கஷ்டம். நல்ல தயிர்கிடைக்கும். இந்த வூர்பிரம்பு வேலைக்கு பேர்போனது.

குறிப்பு:—ஸ்ரீராமபட்டாபிஷேகத்திற்குதேவர்கள் எல் லோரும்போய்விட பிரமதேவர் தன்யாகத்திற்குச் சமைத்த அன்னபாறுதிகளை புஜிக்கயாருமில்லையே என ஏங்கியிருக் கையில், ஸ்ரீவிஷ்ணுமூர்த்தி ஒருபாலவுருக்கொண்டு வந்து அவையனைத்தையும் புஜித்து பிரமதேவருக்கு காக்ஷிதந்த திருக்கோலம். அற்புதமானசேவை.

## 50. திருவல்லம்.

இது ஒருபுராதன விஷ்ணு க்ஷேத்திரம். அனந்த பத்மநாபஸ்வாமிக்கு திருமுடிஸ்தான மென்பர் இந்தசந் நிதியில் பிரமாவுக்கும், சிவனுக்கும், பரசுராமருக்கும் தனித்தனிசந்நிதிகளுண்டு.

இது திருவனந்தபுரத்துக்கு தெற்கே 3-மைலில் ஆற்றங்கரைமேல் இருக்கிறது.

## 51. திருப்பாதபூர்.

இதுவும் ஒருபுராதன விஷ்ணு க்ஷேத்திரம். இது அநந்த பத்மநாபஸ்வாமிக்கு திருவடிஸ்தான மெனச் சொல்லப் படுகிறது. இது திருவனந்த புரத்துக்கு வடக்கே கற்சாலை மார்க்கமாய் 6-மைலிலிருக்கிறது. மார்க்கத்தில் ப்ரபலமான வேலாயுதஸ்வாமி கோயில், காக்ஷிக்குறியது.

## 52 காலடி.

ப்ரபாவம்.—ஸ்ரீமத்சங்கர பகவத் பாதாசாரியர் அவதார ஸ்தலம் இங்கு ஒரு புராதன கண்ணன் நாராயணன் சந்நிதி இருக்கிறது. இங்கு பிரபலமான சிவஸ்தல மொன்று மிருக்கிறது.

மார்க்கமும் வசதிகளும்.—இது. சேர்ரனூர் எர்னாகுளம் ரயில்பாதையில் ஆல்வாய் ஸ்டேஷனுக்கு கிழக்கே 6-மைலிலும், அங்கமாலி ஸ்டேஷனிலிருந்து 5-மைலிலு மிருக்கிறது. சத்திர மிருக்கின்றது. பிராம்மணர்களுக்கு மட்டும் ஊட்டுப்பிரை உண்டு.

## 53. பூதமங்கலம்.

ப்ரபாவம்—ஸ்ரீனிவாசமூர்த்தி, அலர்மேல் மங்கைத் தாயார், அஞ்சனசலம், அனுமதீர்த்தம் கிழக்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், முசுகுந்தமுனி வருக்கு ப்ரத்யக்ஷம்.

## 54. மாகறல்.

ப்ரபாவம்—வைகுண்டநாதர், கமலவல்லித்தாயார், சேஷவிமானம், பிருகுதீர்த்தம், கிழக்கே திருமுகமண்ட

லம், வீற்றிருந்ததிருக்கோலம், சிவபிரானுடன் பிருகு மார்க்கண்டேய முனிவர்களுக்கு ப்ரத்யக்ஷம்.

இது காஞ்சீபுரத்திற்கு தெற்கே மட்சாலை மார்க்கமாய் 10-மைலிலிருக்கிறது. இதுஒரு பாடல் பெற்ற சிவஸ்தலம்.

இது திருவண்ணாமலைக்கு வடகிழக்கே 16-மைலிலிருக்கிறது. அகரம் சிப்பந்திக்கு கிழக்கே 10-மைல்

## 55. திருப்பாற்கடல்.

ப்ரபாவம்— ப்ரளய ரோதகஸ்வாமி, ஸ்ரீரங்கநாதன், ஸ்ரீரங்கநாயகி, புண்டரீக புஷ்கரிணி, க்ஷீரநதி, வேதசார விமானம், சயன திருக்கோலம் கிழக்கே திருமுகமண்டலம், பிரமதேவருக்கு ப்ரத்யக்ஷம்.

ஆஜானு கேசவஸ்வாமி, சிவலிங்கத்தினின்றும்தோன்றி புண்டரிகரிஷிக்கு ப்ரத்யக்ஷம்.

ப்ரசன்ன வேங்கடேசப் பெருமாள், ஓர் வைணவ ப்ராமணருக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்—இது M. S. M. Ry. வாலாஜா ரோட் ஸ்டேஷனுக்கு தென்கிழக்கே கற்சாலை மார்க்கமாய் 9-மைலிலிருக்கிறது, திருப்புட்குழிக்கு மேற்கே 10-மைலிலிருக்கிறது. ஜட்காவண்டிகளுண்டு.

### புராணவரலாற்றுச்சுருக்கம்.

ஸத்யவ்ரத க்ஷேத்திரத்தில் பிரமதேவர் செய்து கொண்டிருந்த யாகத்தை அழிக்கக்கருதி வாணி வேகவதி என்னும் நதியுருவாகி ப்ரளயகாலத்தில் பொங்கி எழும் சமுத்திரம் போல் ஓடிவரும் வேகத்தை விஷ்ணுமூர்த்தி தடுத்தமையால் இம்மூர்த்திக்கு ப்ரளய ரோதகஸ்வாமி என்று பெயராயிற்று.

புண்டரீகமகரிஷி திருகடல்மல்லையில் கமலநாதனைக் கண்டு களித்து வீடுபெற நெடுநாள் தவம் செய்தனர். அங்கு பரமன் அவருக்கு ப்ரத்யக்ஷமாகாமையால் அவர் வனாந்தரம் போக வெண்ணி வரும் வழியில் இங்குவந்து ஸ்வாமி தரிசனத்திற்காகக் கோயிலுள்புக அங்கு சிவலிங்க மிருக்கக்கண்டு மனம்வருந்தி பசியோடு பின்னும் செல்லு கையில் பகவான் தன்பக்தன் பட்டினியாய் போவதை சகியாதவனாய் ஒரு விருத்த வேதிய வடிவங் கொண்டு அவருக்கு எதிரில் வந்து "நீ யேன் பசியாய் போகின்றாய்" என்று கேட்டு சங்கதியறிந்து நகைத்து அங்கிருப்பது விஷ்ணு மூர்த்திதான் என்றுணர்த்தி கோயிலுக்குள் செல்லச் செய்து மறைந்து விட்டனர். புண்டரீகமஹரிஷி கோயிலுக்குள் சென்று தரிசனம் செய்கையில் அந்த லிங்கத்தின் மேல் சதுர் புஜங்களில் சங்குசக்கர கதாகட்கங்கள் தரித்த விஷ்ணுரூபத்தைக்கண்டு அதிசயித்து தோத்திரஞ்செய்ய பகவான் ப்ரசன்னராகி பக்தனுடைய அபேக்ஷிதங்களை அளித்தனர். பாதமுதல் முழங்கால் வரையில் லிங்க வுருவாயும் அதன்மேல் விஷ்ணு ரூபமாயும் இருப்பதால் இம்மூர்த்திக்கு ஆஜானு கேசவஸ்வாமி என்று பெயராயிற்று.

## 56. பிலகூடம். (பிட்ரகுண்டா)

இங்கு மலைமிசை அலர்மேல் மங்கா சமேத ஸ்ரீ வேங்கடாசலபதி எழுந்தருளியிருக்கிறார். வாங்கூல் கஜபதிராஜன் பெண்ணாகிய கௌரவாம்பாளுக்கு ப்ரத்யக்ஷ மென்றும் நாரதர் ப்ரதிஷ்டை என்றும் சொல்லப்படுகிறது.

இது Bitragunta—பிட்ரகுண்டா ஸ்டேஷனுக்கு வடக்கே $2\frac{1}{2}$ மைலிலிருக்கிறது. மலை அடிவாரத்தில் 3 சத்திரங்களிருக்கின்றன. கிழக்கே 8-மைலில் சமுத்திரமிருக்கின்றது.

## 57 ரங்கநாயகப்பேட்டை. (நெல்லூர்)

ப்ரபாவம்: ஸ்ரீ ரங்கநாதஸ்வாமி, ஸ்ரீ ரங்கநாயகி, உத்தரபினாகினிநதி, புஜங்க சயனம, மேற்கே திருமுகமண்டலம், பிரமதேவருக்கும் கசியப முனிவருக்கும் ப்ரத்யக்ஷம்

மார்க்கமும் வசதிகளும். இது M.S.M. Ry. நெல்லூர் ஸ்டேஷனுக்கு மேற்கே கற்சாலை மார்க்கத்தில் 1 மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு, சத்திரமும் ஹோடல்களுமிருக்கின்றன.

## 58. திருவரங்கம்.

ப்ரபாவம்.—ரங்கநாதன், ரங்கநாயகி, பினாகினிநதி, சந்திரபுஷ்கரிணி, பிரமதேவருக்குப் ப்ரத்யக்ஷம்.

இது திருக்கோவலூருக்கு மேற்கே மணலூர் பேட்டை கற்சாலைமார்க்கமாய் 13-மைலிலிருக்கிறது. மணலூர் பேட்டைக்கும் திருவரங்கத்துக்கும் 2-மைல். மணலூர் பேட்டை திருவண்ணாமலைக்கு தெற்கே 16-மை லிலிருக்கிறது.

## 59. கிஷ்கிந்தை

ப்ரபாவம்.—சீதாநாயகன் சந்நிதியும், நரசிம்மஸ்வாமி சந்நிதியு மிருக்கின்றன. இங்கு ஸ்ரீராமபிரான் மாருதியைக் கண்டு அவர் வாயிலாக சுக்ரீவனை தோழமைகொண்டு வாலியைக்கொன்று தேவியைத்தேட வானர சேனையை விடுத்த தலம். இதற்கு சமீபத்தில் பம்பை சரஸும் இருசியமுக மலையுமிருக்கின்றன.

இங்கு ஹம்பிவிரூபாக்ஷ மென்றும் பெரிய சிவஸ்தலமிருக்கிறது. துங்கபத்திராநதி தீரத்தில் மதங்கபர்வதம் தாழ்வரையில் சீதாலக்ஷ்மண சுக்ரீவாதிகள் ஏகசிலாமூர்த்தமாயிருக்கிறது. மலைமிசை அத்யாச்சர்யகரமான விட்ட

லேச்சுர ஸ்வாமிசந்நிதியும் மிக்கழகமைந்த இரண்டு மண்டபங்களுமிருக்கின்றன. இங்குபெரிய வெண் குரங்குகளிருக்கின்றன. அவை சுக்ரீவன் சந்ததி என்றும் பெரிய கருங்குரங்குகள் வாலி சந்ததிகளாம். முன்னவை மனுஷ்யரிடத்தில் வருகின்றன. பின்னவை மநுஷ்யர்களைப் பார்ப்பதில்லை. இவ்விரண்டு சாதிகளுக்கும் எப்போதும் போராட்டமாகவே யிருக்கின்றன.

**மார்க்கமும் வசதிகளும்.**—இது பல்லாரிக்கு மேற்கிலுள்ள Hospet. ஒஸ்பட்ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 8-மைலில் துங்கபத்திரா நதி தீரத்திலிருக்கிறது. யாத்திரை வாசிகளுக்கு எல்லா சௌகரியங்களு மிருக்கின்றன.

## 60. பண்டரிபுரம்

**ப்ரபாவம்.**—பாண்டுரங்கர், விட்டதேவர், ருக்மபாய் ஞானனந்த விமாநம், க்ருஷ்ண தீர்த்தம், சந்திரபாகாநதி கிழக்கு முகமாய் இடுப்பில் கையை வைத்துக்கொண்டு நின்ற திருக்கோலம். புண்டரீகருக்கு ப்ரத்யக்ஷம்.

**பண்டரீபுரம்** ஓர் புராதன அழகிய சிறுநகர். மேற்கிலிருந்து கீழ்நோக்கிச் செல்லும் நதிக்குச் சந்திரபாகா என்றுபெயர், பூர்வம் அந்நகரில் அந்தணர் குலத்தில் உதித்த ஜன்னு என்னும் பக்தசிரோமணிக்கு ஓர் புத்திரன் பிறந்தான். பெற்றோர் அவனுக்கு புண்டரீகன் என்று பெயரிட்டனர். அச்சிறுவன் இளம்வயதில் துஷ்டசகவாசத்தால் கெட்டலைந்து பிறகு புத்திவந்து தக்கபருவத்தில் வயோதிகரான தாய்தந்தைகளுக்கு பணிவிடைசெய்து கொண்டிருந்தான். ஒருநாள் பகவான் ஜன்னுவுக்கு பேறளிக்கவும் இந்திரன் அடைந்த சாபத்தைப் போக்கவும் புண்டரீகனுக்குச் சாட்சிகொடுக்கவும் பரமபதம் விட்டு

இங்கேகினர்- பரமன்வந்த சமயம் புண்டரீகன் தாய்தந்தையர்களுக்குப் பணிவிடை செய்துக்கொண்டிருந்ததனால் தன் பக்கத்தில் (விருத்திராசுரனால் சாபமடைந்த இந்திரன், இந்திரைக்கேள்வனைக்குறித்து கடுந்தவஞ்செய்ய அவர் அவன் முன் தோன்றி நீபண்டரீபுரம் சென்று அங்கு செங்கல்லாகவிருப்பாயாகில் அங்கு நம்மால உனது சாபம் நீங்குமென்று கூறி மறைய, இந்திரனும் அங்கு செங்கல்லாக கிடந்தான்) இருந்த ஒருசெங்கல்லை எடுத்து அருகில்நிற்கும் பகவானுக்கு சமீபத்தில் விட்டெறிந்து அதன்மேல் சிறிது நேரம் இருமின்,என்மாதா பிதாக்களின் பணிவிடைகளை முடித்துக்கொண்டு வருகிறேன் எனக்கூறி தன்கைங்கரியத்தில் அமர்ந்திருந்தான். முன்னம் சாபத்தால் செங்கல்லாகக்கிடந்த இந்திரன்மேல் நின்றதும் இந்திரன் தன் ஸ்வரூபத்தையடைந்து பகவானைத்துதித்து தன்னுலகேகினன். புண்டரீகன்பெற்றோர் கடமைகளை முடித்துக்கொண்டு கண்ணன் பக்கல்வந்து அண்ணலை பலவாராகத்துதித்த இளைஞன் பக்திக்குகந்து, "குழந்தாய் நீ உன் பெற்றோர்களுக்குச்செய்யும் பணிவிடைகள் சிலாகிக்கத்தக்கவை, அவர்களுக்குப் பணிவிடைசெய்தலையும் பலனைச் காட்டிலும் மிக்கதோர்பலன் மற்றொன்றில்லை. உனக்கென்னவரம் வேண்டும்" என்று கண்ணன் கேழ்க, புண்டரீகன் ஐயனே உம்மைக் கண்டமையால் யான் கிருதக்ருத்யனானேன், ஆயினும் இங்கே விட்டலமூர்த்தி என்னும் திருநாமத்துடன் எப்போதும் எழுந்தருளியிருந்து உம்மைதரிசிக்கும் பக்த கோடிகளுக்கு பலமளித்துவரவேணும். எனது பெயரால் இந்நகரமும் விளங்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அதுமுதல் இன்றளவும்" பண்டரிபுரம்" என்னும் க்ஷேத்திரத்தில் புண்டரீகவாதன் என்றும் பாண்டுரங்கன் என்றும் விட்டலன் என்றும் திருநாமங்களோடு எழுந்த

ருளியிருக்கும் கிருபா சமுத்ரமாகிய கண்ணனை உயர் குலமென்றும் தாழ்குலமென்றும் வேற்றுமையின்றிபலரும் பணிந்து போற்றிவருகிறார்கள்.

அரங்கனைப் பணிந்து அடிபணிய வொட்டாமல் அன்பர்களைத் துரத்தி சுதையடைத்து மூஷிகங்கள் போல் உண்ணும் அசாம்சரான, அந்தணரென்னும் அகப்பேய்கள் பூசிஷ்டமான அரங்கம் செல்வதைவிட அன்பர்கள் வாழும் பாண்டுரங்கம் செல்வதே உத்தமம் என்பேன்.

மார்க்கமும் வசதிகளும்.—இது பண்டரிபுரம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே ஒருமைலில் பீமாநதிக் கரையின் மீதிருக்கின்றது. தர்மசாலைகளிருக்கின்றன. சந்நிதிக்குச் செல்வோர் யாவரும் ஜய்ஜய் விட்டல் என்று நாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு கண்ணபிரானை ஆலிங்கனம் செய்வர். இப்பாண்டுரங்கம் நாதப்ரஹ்ம மென்வும், ஜகந்நாதம் அன்னப்ரஹ்மம் எனவும், கயா பிண்ட ப்ரம்மம் எனவும் சொல்லுவர். தர்மான்ன சத்திரங்களும் தர்மங்களுமுண்டு.

## 61. சோநேபூர்.

ப்ரபாவம்.—கஜேந்திரவரதர், திருமகள் நாச்சியார் அநந்த கருட விஷ்வக் சேனாதிபர். சேஷவிமானம் பத்ம சரசு, கஜேந்திர புஷ்கரிணி தெற்கே திருமுகமண்டலம். நின்ற திருக்கோலம். கஜேந்திர ஆழ்வானுக்கு ப்ரத்யக்ஷம் இது இராமபிரானால் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பர். கஜேந்திர மோக்ஷம் நிகழ்ந்த இடம் இதுவே என்பர்.

மார்க்கமும் வசதிகளும்—B. & N W. Ry. Sonepur Junction. சோநேபூர் ஜங்ஷன் ஸ்டேஷனுக்கு வடக்கே கங்கைமாநதியும் கண்டகி நதியும் சேருமிடத்தில் இருக்கிறது. வண்டிகளுண்டு தர்மசாலைகளிருக்கின்றன. இது ஒரு

பெரிய யாத்திரா க்ஷேத்திரம். இங்கு கார்த்திகை பௌர்ணமியை இறுதியாகக் கொண்ட பத்துநாள் மேலா உற்சவம் நடக்கிறது. இந்த காலத்தில் இங்கு கூடும் சந்தைக்குச் சமானமானது உலகில் எங்கும் இல்லையாம்.

## 62 இராமக்ஷேத்திரம்.

ப்ரபாவம்.—ஸ்ரீராமன், ஜானகி பிராட்டியார், லக்ஷ்மண பரத சத்ருக்னர், மாருதி, தாரகவிமானம், பாவன தீர்த்தம், இராம தீர்த்தம், தெற்கே திருமுக மண்டலம், நின்ற திருக்கோலம், திரேதா யுகத்தில் தபசுசெய்த சூத்திர ஜன்மாவான ஜம்புகனைக் கொன்று அவனபீஷ்ட ப்ரகாரம் அவனுக்கு மோக்ஷம் தந்தவர்

நரசிம்மஸ்வாமி, சிம்மவல்லித் தாயார், பாவன விமானம், வராக தீர்த்தம், நரசிம்மதீர்த்தம், தத்தாத்ரேய தீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம், வீற்றிருந்ததிருக்கோலம், அம்பரிஷ மகாராஜனுக்கு ப்ரத்யக்ஷம். இந்த க்ஷேத்திரத்தை காசி தக்ஷிண துவாரம் என்று சொல்லுகிறார்கள்.

மார்க்கமும் வசதிகளும்—இது நாகப்பூருக்கு வடக்கே 21 மைலிலுள்ள Ramtek. ராம்டேக் ஸ்டேஷனுக்கு 1-மைல்தூரத்திலிருக்கிறது. வண்டிகளுண்டு தர்மசாலையிருக்கிறது. இதற்கு சிந்தூரகிரி என்றும் புராணப் பெயர். இந்த மலை 500-அடி உயரமுள்ளது.

## 63. ஸ்ரீகூர்மம்.

ப்ரபாவம்.—ஸ்ரீகூர்மநாதஸ்வாமி, ராஜ்ஜியலக்ஷ்மி, காந்தர்வ விமானம், நாரதகுண்டம், சுதாகுண்டம், சக்ர தீர்த்தம், கௌண்டில்ய தீர்த்தம், வக்கர தீர்த்தம், மகோததி, மேற்கே திருமுகமண்டலம். நின்ற திருக்கோலம். சுவேத மஹாராஜனுக்கு ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது சீகாகுளம் ஸ்டேஷனுக்குத் தெற்கே ரோட்டு மார்க்கமாய் 16-மைலில் சமுத்திரக்கரையோரத்திலிருக்கிறது. 8-மைலில் குறுக்கு மார்க்கம் ஒன்று இருக்கிறது. கஷ்டம். வண்டிகளுண்டு, சத்திரமில்லை. இந்த ஸ்தலம் மிகப்பெரியது. சுவேத புஷ்கரிணியில் எலும்புகளைப் போட்டால் ஆமைகளாக ஆகின்றன. பஞ்சமர் ரஜஸ்வலையான ஸ்திரிகள் இந்த சுவேத புஷ்கரிணியைத் தொட்டால் பாசிபிடிக்கும். சுவாமியினுடைய புண்ணிய வாசக தீர்த்தம் புரோக்ஷித்தால் பழைய பிரகாரம் தீர்த்தம் சுத்தமாகிவிடும்.

## 64. சிம்மாசலம்

ப்ரபாவம்.—ஸ்ரீவராக நரசிம்பஸ்வாமி, சிம்பவல்லித் தாயார், பிரகலாதவிமானம், கங்காதாரை, கோதாவரிதாரை, வேகவதிதாரை, மலாபகாரிணி, அநுமந்ததாரை, மாதவதாரை, முதலிய தீர்த்தங்கள். மேற்கே திருமுகமண்டலம். நின்றதிருக்கோலம் பிரகலாதனுக்கும் புரூரவச்சக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது சிம்பாசலம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 4-மைலிலும், விஜயநகரம் ஸ்டேஷனிலிருந்து தெற்கே 10-மைலிலும், வால்டேர்ஸ்டேஷனுக்கு வடக்கே 6-மைலிலும், இருக்கின்றது. சிம்மாசலம் ஸ்டேஷனில் மெயில்வண்டிகள் நிற்பதில்லை. வால்டேர்ஸ்டேஷனிலிறங்கிப்போவதே பலவிதத்திலும் சௌகரியம். வண்டிகளுண்டு. சத்திரமிருக்கின்றது.

## 65. பத்திராசலம்.

ப்ரபாவம்.—ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி, சீதாபிராட்டியார், லக்ஷ்மணப்பெருமாள், சிறியதிருவடி, ஆனந்த நிலய

விமாநம், ஸ்ரீராமதீர்த்தம், உஷ்ண குண்ட தீர்த்தம், கோதாவிரிநதி, கிழக்கே திருமுக மண்டலம், நின்றதிருக் கோலம் மேருநந்தனனுண பத்ரமமஹருஷிக்கு ப்ரத்யக்ஷம். 35 படிகளுடைய சிறிய குன்றின்மிசை ஸ்ரீராமன் எழுந் தருளியிருக்கிறார் மற்றொரு மேட்டின்மீது ரங்கநாதன் எழுந்தருளி இருக்கிறார்.

மார்க்கமும் வசதிகளும்.—இது ராஜமஹேந்திரத்திலி ருந்து வடமேற்கே கோதாவரிநதிக்கரையில் மேல் 60-மை லிலிருக்கிறது. கோதாவரிநதியிலேயே போகும் படகு களில் செல்லலாம். ஆங்காங்கு பலசௌகரியங்களுமுண்டு. பெஜவாடாவுக்கு வடமேற்கிலுள்ள எல்லாண்டுரயில் ஸ்டே ஷனிலிறங்கி நேர்வடக்காய் 60-மைல் சென்றால் இத்த லத்தை யடையலாம். காட்டுமார்க்கமாகையால் பயமுண்டு. சத்திரங்க ளிருக்கின்றன. ராஜமகேந்திரவரத்திலிருந்து போவதே உத்தமம்.

## 66. நாதத் துவாரம்.

ப்ரபாவம்.—இது பிரசித்திப்பெற்ற விஷ்ணுக்ஷேத் திரம். பூர்வம் மதுரையில் பிரதிஷ்டிக்கப்பட்டு அர்ச்சித்து வந்த ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி விக்கிரஹம் ஒருகாரண விசேஷத் தால் இவ்விடத்திற்கு எடுத்து வந்து ஸ்தாபிக்கப்படடிருக் கிறது. இதுவைகுண்டமாகவே இப்போது விளங்குகிறது. இந்த க்ஷேத்திர எல்லைக்குள் யாரும் எவ்விதஜீவவதையும் எக்காரணத்தாலும் என்றும் செய்யக்கூடாது.

மார்க்கமும் வசதிகளும்.—பம்பாயிலிருந்து துவார கைக்குப்போகும் ரயில்பாதையில் 403-வதுமைலிலுள்ள (வத்துவான்—வங்கனர் ஜங்ஷன்களுக்கு மத்தியில்.) Muli மியூலிஸ்டேஷனுக்குத் தெற்கே 1-மைலிலிருக்கிறது. வண் டிகளும் தர்மசாலைகளும் இருக்கின்றன.

## 67. நாசிகை.—பஞ்சவடி.

ப்ரபாவம்.—இங்கு ஸ்ரீராமன் சந்நிதியிருக்கிறது. அதில் சீதாராமலக்ஷ்மணபரத சத்ருக்ன அநுமத் ஸமேதராய் ஸ்ரீரகுநாதன் எழுந்தருளியிருக்கின்றார். இது கோதாவரி வடகரையில் இருக்கிறது. ஐந்து ஆலவிருக்ஷங்கள் இருப்பதால் இதற்கு இப்பெயர் உண்டாயிற்று.

தென்கரையில் நாசிகைமாநகரம் இருக்கிறது. வடதேசாத்தார் மேல்நாட்டுக்கு நாசிகையை, ஸ்ரீகாசி என்றும், கோதாவரியை கங்கை என்றும் சொல்லுவர்.

மார்க்கமும் வசதிகளும்.—இது (G. I. P. R.) Nasik. நாசிக் ஸ்டேஷனுக்கு வடமேற்கில் 5-ஃமைலில் இருக்கிறது. டிராம்வண்டி முதலான எல்லா சௌகரியங்களுமுண்டு. நாட்டுக்கோட்டையார் சத்திரமும் தர்மசாலைகளுமிருக்கின்றன. இராமாநுஜஸ்வாமி மடமென்றும் பர்ணசாலை என்றும் சந்நிதிக்குப்பெயராம்.

குறிப்பு.—இளையபெருமாள் சூர்ப்பநகையின் மூக்கை அறிந்த விடமாதலாலும். சிவபிரான் தன்னுசியை யறிந்து அச்சுதனை, ஆராதித்தஸ்தல மாதலாலும் இதற்கு நாசிகை என்று பெயர் உண்டாயிற்றென்பர். சிவபிரான் பிரம்ம ஹத்தியால் பீடிக்கப்பட்டகாலத்தில் நந்தி தேவர் அவரைப்பிரிந்து நாசிகையில் வந்திருந்தபோது உழுவதற்கு இவ்வெருது நன்றென்று தன்னைப்பிடிக்க வந்த பிராமணர்களை யெல்லாம் கொன்றது. அதனால் வந்தப்ரம்மஹத்திபை அது ராமதீர்த்தத்தில் நீராடி பஞ்சவடியில் நம்அரும் பெறலடிகளை தரிசித்து பாவனமாய் வசித்திருக்க, அக்காலை ருத்திரமூர்த்தி ஆங்குவர விடைவணங்கி முன்னிகழ்ந்ததை உரைத்தது. கபாலியும் அத்தீர்த்தத்தில் நீராடி பஞ்சவடி

பில் பரமனை சண்பகமலர் ஆயிரங்கொண்டு சிலநாள் அர்ச்சித்து வந்தார். ஒருநாள் ஒருமலர் குறைய அதற்கு தத்சத்ருசமாகிய தன் நாசியை அறுத்து அர்ச்சித்தார், அதற்கு சீதாநாயகன் அவர்முன் தோன்றி பிரம்மஹத்திதோஷத்தைப் போக்கி அருள்செய்தான் என்பர். இது விஷ்ணு தன் கண் ஒன்றைப் பிடுங்கி சிவனை அர்ச்சித்து சக்கரத்தைப் பெற்றான் என்று சாதிக்கும் கதையை ஒத்திருக்கின்றது.

## 68. ஸ்ரீ பத்மநாபம்

இது ஒருபுராண ப்ரஸித்தமான புண்யக்ஷேத்திரம், மலைமிசை பத்மநாதஸ்வாமி, ஶயன திருக்கோலம், அடிவாரத்தில் குந்தீமாதவஸ்வாமிசந்நிதி. பத்மநாதஸ்வாமிக்கு சங்கசக்கரங்களே சேவையாகும், வைகானஸ ஆராதனம் இது விஜயநகரம் ஸ்டேஷனுக்கு தெற்கே 10-மைலிலிருக்கிறது.

## 69. தவளேச்சுரம்.

இது, இராஜமந்தரி ஸ்டேஷனிலிருந்து தெற்கே 3-மைலிலிருக்கிறது, 25 படிகளுடைய சிறியகுன்றின்மிசை ஸ்ரீ ஜனார்த்தனஸ்வாமி ஆபோஶஹஸ்தராய் கிழக்குமுகமாய் நின்றுகொண்டு கௌதமருக்கு ப்ரத்யக்ஷம். இவ்விடத்தில் கோதாவரி இரண்டாகப்பிரிகிறது. இங்கிருந்து சமுத்திரசங்கமம் வரையில் ஆற்றின் மத்தியிலும் ஆற்றோரத்திலுமாக நவ (9) ஜனார்த்தனங்களிருக்கின்றன. 1-தவளேசுரம், 2-கடியம் 3-மடிகி, 4-ஆலமூர், 5-ஜொன்னாடை 6-கபிலேச்சுரம், 7-தாபூதமூடி, 8-கோரிபள்ள 9-கோடிபல்லி.

## 70 பிடாபுரம்.

குந்தீமாதவஸ்வாமி சந்நிதியிருக்கிறது இதை பாதகயை என்பர். இது பிடாபுரம்ஸ்டேஷனுக்கு தென்மேற்கே 1-மைலிலிருக்கிறது.

## 71. ஸர்ப்பாவரம்

ப்ரபாவம்.—பாதாளபாவநாராயணஸ்வாமி, கிழக்கே திருமுகமண்டலம், வீற்றிருந்தத்திருக்கோலம், முக்திஸரஸு, நாரதருக்குப்ரத்யக்ஷம், மூலவர் கருடாரூடர். இது காகினாடா ஸ்டேஷனுக்கு வடக்கே ரோட்டுமார்க்கமாய் 3-மைல்தூரத்திலுள்ளது.

## 72. மங்களகிரி.

ப்ரபாவம்.—மலைமேல் பானகநரஸிம்மஸ்வாமி, சக்ரதீர்த்தம் ராஜலக்ஷ்மி, மங்களவிமானம், கல்யாணபுஷ்கரிணி, சிகடிகோனேரி, கிழக்கேதிருமுகமண்டலம் யுதிஷ்ரருக்கு ப்ரத்யக்ஷம். 343 படிகளையுடைய மலைமிசை எழுந்தருளியிருக்கிறார். மலையடியிலும் 11நிலையுள்ளபெரியகோபுரமுடைய அழகியசிங்கர் சந்நிதியிருக்கின்றது, சின்னபாத்திரத்திலாயினும் பெரியபாத்திரத்திலாயினும் பானகம் எவ்வளவு இருந்தபோதிலும் அதில் பாதிபாகத்தையே பானஞ்செய்வர்.

இது பெஜவாடாவிலிருந்து குண்டகல்லுக்கு பிறியும் பாதையில் 7-மைலிலிருக்கும் மங்களகிரிஸ்டேஷனுக்கு தெற்கே $\frac{1}{2}$ மைலிலிருக்கிறது.

## 73 மன்னார்போலூர்.

ப்ரபாவம்.—ஜாம்பவந்தக்ஷேத்திரம், அழகியமன்னார், கிருஷ்ணமூர்த்தி, ருக்மணி சத்யபாமை சமேதராய் ஜாம்பவந்தருக்கு ப்ரத்யக்ஷமான ஸ்தலம். காரங்கிநதி. இது சூளூர்பேட்டைக்கு வடமேற்கில் 2-மைலிலிருக்கிறது.

## 74. ஸ்ரீபுருஷோத்தமம் (ஜகந்நாதம்.)

ப்ரபாவம்.—ஜகந்நாதன், கிருஷ்ணமூர்த்தி, பலபத்திரர், சுபத்திரை, ஸ்ரீமந்திரவிமாநம், மார்க்கண்டேய தீர்த்தம், வருண தீர்த்தம், ரோகிணி முதலிய நூறு தீர்த்தங்கள். குணகடல் தீர்த்தம், ஆலவிருக்ஷம், கிழக்கே திருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், இந்திரத்யும்னனுக்கும், மார்க்கண்டேயருக்கும் ப்ரத்யக்ஷம், வருணதேவனாலே பிரதிஷ்டை செய்து ஆராதிக்கப்பட்டவர்.

ஸ்ரீவிஷ்ணுமூர்த்தி கண்ணனாய் அவதரித்து துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்து தன்னடிஜோதிக்கெழுந்தருள திருவுள்ளம் பற்றின போது சதுமுகனும் சங்கரனும் இவ்வுலகில்யாவரும் பலிபுரிந்து ஈடேற திவ்வியமங்கள விக்கிரகத்தை வைத்தருள வேண்டுமென்று கண்ணபிரானை ப்ரார்த்திக்க ஆயனும் அவ்வண்ணமே வரமருளி தரு ஒன்றினை தன் திருமேனியாய் யொப்பச்செய்து வைத்து சுடர்சோதி வெள்ளத்தூய நல்வீடு ஒளித்தனன். கண்ணன்கிருபை கூர்ந்து இவ்வுலகில் வைத்தருளின விக்ரஹத்தை களேபரம் என்று எண்ணி ஞானவீனர் நெருப்பிலிட்டு எரிக்க அப்போது அயனும் அரனும் எம்மான் அமலத்திருவுருவன்றோ இது என்று அச்சமுற்று அநலேக்குளிரும்படி வருணனுக்கு உரைக்க அவனும் அக்கணமே மழை பொழிந்தனன். அம்மழை வெள்ளமானது அமலன் திருமேனியைக்கடலிடைச்சேர்ப்ப அங்கு வருணன் அதை ப்ரதிஷ்டைசெய்து ஆராதநம் புரிந்து வந்தான். பிறகு இந்திரத்யும்னன் என்னும் அரசன் கோவிலமைத்து அலைகடலிலிருந்த அவ்விக்கிரஹத்தை கோயிலில் ப்ரதிஷ்டை செய்து பரமபத மடைந்தான் என்பது புராணவரலாறு.

மார்க்கமும் வசதிகளும்.—இது (B. N. R.) Puri பூரி ஸ்டேஷனுக்கு தெற்கே ஒருமைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு. நூற்றுக்கதிகமான தர்மசாலைகளிருக்கின்றன. பிரசாத பலகாரங்களுக்குக் குறையில்லை. பண்டாக்கள் தொந்திரவு அதிகம்.

குறிப்பு.—பாண்டுரங்கம் நாதபிரம்பம், கயா பிண்ட பிரம்மம், ஜகந்நாதம் அன்னபிரம்மம் என்றும் சொல்லுவர்கள். "அன்னம - எந்தக்கரணத்தால் அன்னத்தின்வழியாய் பிரம்ம விஞ்ஞானம் உண்டாகின்றதோ, அந்தக்காரணத்தால் அன்னத்தைநிந்திக்கக்கூடாது. பிருதிவி ஆகாசங்களிரண்டும், ஆபோஜ்யோதிகள் இரண்டும், அந்நமும் பிராணமும் போல் ஒன்றில் ஒன்றிருத்தலால் அந்நஸ்வரூபமாகவும், ஒன்றுக்கொன்று ஆதாரமாதல் பற்றி அந்நாதமாகும் பிராணஸ்வரூபமாகவுமிருக்கின்றன. இவ்வாறு சரீரபிராணங்கள் இரண்டினையும் அன்னான்னாதங்களாய் தெரிந்து கொள்பவன் அன்ன அன்னாதஸ்வரூபனாய்ப் புத்ராதி ஸந்தான நிறைவாலும், கவாச்வாதி ஸம்பத்தாலும் பிரம்ம தேஜஸ்ஸாலும் உலகத்தில் புகழாலும், மிக்கஉயர்ந்தவனாகிறான். அன்னத்தைப் பலவகையிலும் சம்பாதித்தல் வேண்டும். அச்சம்பாதித்த அன்னத்தை அந்நார்த்திகளுக்கு கொடுத்தல் வேண்டும். அவ்வாறுஎந்தவயதுகளில் கொடுக்கிறானோ அந்தவயதுகளில் அது அவனுக்கு உதவுகிறது" என்று தைத்திரியோபநிஷத் உத்கோஷிக்கிறது.

ஜகந்நாதம், காசி, கயா, பிரயாகை, நாசிக் பண்டரிபூர் முதலிய விடங்களில் பண்டாக்களின் தொந்தரவு அதிகம். அவர்கள் நம்மை Platform ப்லாட்பாரத்திலேயே பார்த்து தொந்தரவு செய்வார்கள். இரண்டொருஸ்டேஷன்களுக்கு முன்னதாகவும் கூடவந்து தொந்தரவு செய்வார்

கள். அவர்களிடத்தில் ஜாக்கிரதையாகப் பேசிக்கொண்டு அவர்கள் வலையில் சிக்கிக்கொள்ளாமல் இருத்தல் வேண்டும். அவரவர்களது சாமான்களை அவரவர்களே ஜாக்கிரதை செய்துக்கொள்ளவேண்டும். ரெயில் ப்லாட்பாரங்களிலும், முசபர்கானாவிலும், சத்திரங்களிலும், வண்டிகள் செல்லும் போதும் பெட்டிகள் மூட்டை முடிச்சுகள் களவு போய் விடுகின்றனவென்றால் அது யாருடைய தப்பிதம்? அது நம்முடைய அஜாங்கிரதை யன்றோ?

## 75 சுதாம்புரி (போர்பந்தர்)

குசேலர் சந்நிதி-கிருஷ்ணன் அஷ்ட மஹிஷிகளோடு உபசரணை செய்யும் பாவனையாய் ஒரு பெரிய படம் எழுதி வைக்கப்பட்டிருக்கிறது.

போர்பந்தர் ஸ்டேஷனுக்கு $\frac{1}{2}$ மைலில் சுதாம்புரி என்ற குசேல பட்டணம் இருக்கின்றன. மடங்களு மிருக்கின்றன.

## 76 கும்ஸி (கோமுதிதுவாரகை)

இங்கு கேசவன், மதவன் புருஷோத்தமன், நரசிம்மன், சாக்ஷி கோபாலன் சந்நிதிகளும் கிருஷ்ணன், துருவாசர், ராதாகிருஷ்ணன் முதலிய சந்நிதிகளுமிருக்கின்றன.

இது போர்பந்திரிலிருந்து கப்பல் மார்க்கமாய் 50-மைல் தூரத்திலிருக்கிறது. தருமசாலைகளிருக்கின்றன.

## 77 பேட் துவாரகை

இங்கு துவாரகாநாதன், பலராமன், ப்ரத்யும்நன், ருக்மணி, ஸத்தியபாமா, ராதா ஜாம்பவதீ இவர்களுடைய சந்நிதி களிருக்கின்றன.

கும்வலி துவாரகையிலிருந்து 15-மைல் வண்டியிலும் 6-மைல் படகிலும் சென்றால் இத்தலத்தையடையலாம். தர்மசாலை களிருக்கின்றன.

## 78 மாந்தாதா

இது R. M. Ry. கண்டுவா ஜங்ஷனிலிருந்து வட மேற்காய் 87 மைலிலுள்ள மோர்டாக்கா ஸ்டேஷனிலிருந்து 7-மைலிலிருக்கிறது இது நர்மதாநதியிலுள்ளதோர் தீவு. இதை ஸ்காந்த புராணத்தில் வைடூர்யமணிபர்வத மென்றுசொல்லப்பட்டிருக்கின்றது. சிவாலயமும் விஷ்ணுவாலயமும் விசேஷம், அநேகஜயினர் கோயில்களுமிருக்கின்றன. சித்பூரில் ஸரஸ்வதிநதியில் 3 நாள் ஸ்நாநமும் யமுனையில் 7 நாள் ஸ்நாநமும் கங்கையில் 1-நாள் ஸ்நாநபலமும் இதை தரிசித்தமாத்திரத்தால் கிடைக்குமென்று சொல்லப்படுகிறது.

## 79 பிரபாச தீர்த்தம்

ப்ரபாவம்-பஞ்சஸ்ரோதா, ஹிரண்யா, விரங்கனி, லக்ஷு, கபிலை என்கிற ஐந்து நதிகளும் சேர்ந்து ஸரஸ்வதிநதியாக மேற்குமுகமாக ஓடுகின்றது. த்ரைவேணி தீர்த்தம் ப்ரஸித்தம். இதற்கே சூரியகுண்டமென்றும் ப்ரபாஸதீர்த்தமென்றும் பெயர். தக்ஷப்ரஜாபதியினால் சாபமடைந்த சந்திரனுடைய க்ஷயரோகம் நிவர்த்தியானதும், ஜேரன் என்னும் வேடன் கண்ணபிரானை கட்டைவிரலில் அடித்ததும், கண்ணன் பரமபதமடைந்ததும், பலராமன் பூமியில் மறைந்ததும், நவகோடி நாராயணர்கள் ரிஷிசாபத்தினால் ஒருவருக்கொருவர்போர்புரிந்து கோரைப்புல்லினால் அடித்துக் கொண்டுநாசமடைந்த ஸ்தலமும் இதுவே.

B. B. & C. I. Ry. Veeraval (Gujarat Dist.) வீரவல்துறைமுகஸ்டேஷனிலிறங்கி இரண்டு மைல்தூரம் சென்றால் இதையடையலாம். ஆனேகதர்மசாலை களிருக்கின்றன.

## 80 சுசீந்திரம்

இது ஒருபெரிய சிவஸ்தலமாயினும் இதனுள் பிரமதேவருக்கும், ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கும், சிவபிரானுக்கும் தனித்தனியாய் வரிசையாக சந்நிதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஸ்தாணுமாலயன் என்று அவர்களுக்குப் பொதுத்திருநாமம், அஜஹரீஸ்வரர் என்றும் சொல்லுவர்கள். மத்தியிலிருக்கும் சந்நிதியே நாராயணன் ஸந்நிதி-மலை நாட்டிலுள்ள ஸ்தலங்களில் இது ஒன்றே நம்தேசத்து கோயில்போல் அழகிய உயர்ந்த கோபுரமும் பெரியகுளமுமுடைத்ததாய் மிக்கழகமைந்ததாயிருக்கிறது. இத்தலத்தில் ஸ்ரீமந்நாராயணமூர்த்தி அனசூயாதேவிக்கு புத்திரப்பேறளிக்கவும் அத்திரி மஹரிஷிக்கு மோக்ஷ மளிக்கவும் ப்ரத்யக்ஷமென்பர். அநசூயாதேவிக்கு மும்மூர்த்திகளும் குழந்தைகளாக அவதரித்த இடமும் இதுவே என்பர்.

திருநெல்வேலிக்கு தென் மேற்கே 20-மைலிலுள்ள நாங்குநேரியை (வானமாமலை) யும் 28-மைலிலுள்ள திருக்குறுங்குடியையும், 37-மைலிலுள்ள பணக்குடி, 52-மைலிலுள்ள (Nagar Kovil) நாகர்கோயிலை அடைந்து பின்னும் தெற்கே செல்லும் கன்னியாகுமரி ரோட்டில் 3-மைல்தூரம் சென்றால் இத்தலத்தையடையலாம். (Nagar Kovil) நாகர்கோயிலுக்கு வடக்கே $\frac{1}{2}$-மைல் திருவண்பரிசாரமும், தென்மேற்கே 12-மைலில் திருவாட்டாறும், தெற்கே 11-மைலில் கன்னியாகுமரியும் இருக்கின்றன. கன்னியாகுமரியை தரிசித்து ஆநந்தமடையாதார்கண்கள் பீலிக்கண்களே.

## 81 கன்யாகுமரி

ஸ்ரீபரசுராமர் மலையாளக்ஷேத்திரம் உண்டு பண்ணும் போது அவரால் ஸ்தாபித்து, பூஜிக்கப்பட்ட சிவசக்தி, சிவபிரானை திருமணம்செய்து செய்துகொள்ள விரும்பி, நவமிருக்க, அவர் சக்தியை மணந்து கொள்ளாததால் என்றும் கன்னிகையாகவே, எழுந்தருளியிருக்கும் ஸ்தலம். இது இப்பாரத பூமியின் தென்கோடி. வெகுரமணீயமான ஸ்தலம், அவசியமாய் தரிசிக்க வேண்டிய ஸ்தலமாயும், சமுத்ரஸ்நானங்களில் முக்கியமான ஐந்தில் இது ஒன்று என்பதாயும் சொல்லப்படுகிறது. தெற்கே கன்யாகுமரியிலும் வடக்கே மாயாபுரியிலும், தீர்த்தமாடாதவர்கள் தீர்த்தயாத்திரை செய்தவர்களாக கருதப்படமாட்டார்களாம். இந்த க்ஷேத்திரத்தின் இயற்கையான அமைப்பையும், ஆனந்த தோற்றத்தையும், கண்டுவியக்காதாரும் இருப்பரோ? இங்கு மேல் சமுத்திரமும், கீழ் சமுத்திரமும், தென் மஹா சமுத்திரத்துடன் கலக்குமிடம். இது சுசீந்திரத்துக்கு தெற்கே 8-மைலில் இருக்கிறது. எல்லா சௌகரியங்களும் உண்டு. இதைப்பற்றி அக்காலத்தில் நான் இங்கிலீஷில் எழுதிய குறிப்பையும் மேலே காண்க.

---

# Cape Comorin

## The "Lands End" of India.

To the tourist in India who has travelled far a field in search of sea-resorts, there is assuredly no more interesting spot than Cape Comorin, the "Lands End" of India. It is, the southern Extremity of the Indian continent. The place can be reached by Motor Bus from Trivandram.

On the mainland at the water's edge is situated the celebrated Fane dedicated to KANYA KUMAARI, to which pilgrims from all parts of India flock to worship her and bathe in the holy waters of the Sea, which is being one of the five sacred bathing placcs in India.

H. H. the Maha Rajah, and the Members of the Royal Family too, pay their annual homage to the goddess by visiting the place regularly once a year.

One peculiar feature of the Cape is that sands of different Colours and sizes resembling rice and other grains are found in large quantities along the coast. An interesting legend says that the God Siva of Suchindram Temple which is situated 8, Miles North of the Cape, wishing to marry the KANYA of this place, carried on negotiations and every arrangements for the Marriage was settled. Vast hoards of provisions and other things required for the Marriage feast were got ready. But at the eleventh moment some unfortunate circumstancs happened and the Marriage negotiations were broken off, a complete rupture ensuing between the parties. The rice and other grains provided for the wedding had to be thrown away useless; hence the presence of sands of various Colours, and dimensions all about the Cape, especialty the Sands resembling rice.

On the beach is an old conspicus stone Fort called Vattakota Fort, nearly a Mile North of the Cape. This is one of the biggest Fort constructed mainly of granite blocks in Southern India.

From the top of the Port one could have a beautiful view of the Cape, the Port and the vast blue expanse of the Indian Ocean.

Such, in brief, is Cape Comorin, the "Lands End" of India. The grand blue expanse of the sea, the bright sky above, the grey boulders on which the white breakers incessantly dash, the sea-gulls that are alarmed by the rolling of the huge wave and leave their snug corners in the rocks to spread their white wings against a cloudy sky, the fishermen happy in their catamarans braving the surging sea, the hundreds of varieties of beautiful shells and corals that lie scattered about on the coast, the delicious breeze of the evening, enchanting moon light which poets would love to sing about, the glorious rising and setting of the Sun-all these and more can neither be properly described nor even imagined except by the fortunate few who have ever visited the Cape.

To the old proverb "See Naples and die," we make bold to add another, "See the Cape and die,"

If you desire to learn all abont the Cape, please refer the "General Sketch of the Geology of Travancore and the Cynosure of Travancore.

## 82 பெரும்புலியூர்

ப்ரபாவம்.—ஸுந்தரராஜப்பெருமாள், ஸௌந்தர்யநாயகி, ஸுந்தரவிமானம், [illegible], கிழக்கே திருமுகமண்டலம், நின்ற திருக்கோலம், சிவபெருமானுக்கும், பதஞ்ஜலி வ்யாக்ரபாதமஹரிஷிகளுக்கும், திருமழிசையாழ்வாருக்கு ப்ரத்யக்ஷம்.

இது திருவையாற்றுக்கு மேற்கே 1-மைலில் இருக்கிறது. தஞ்சாவூரிலிருந்து திருவையாறு 6-மைலில் உள்ளது.

திருமழிசை ஆழ்வார் திருக்குடந்தையாத்திரைச்செல்லும் வழிஇடையே, பெரும்புலியூர் என்கிற இந்த க்ஷேத்திரத்தில்வந்து, ஒருதிண்ணையில் எழுந்தருளியிருக்க, அங்கு வேதமோதிக்கொண்டிருந்த அந்தணர்கள், ஆழ்வாருடைய மகிமையை அறியாமல், அவர் தாழ்ந்தஜாதி என்றெண்ணி வேதமோதுவதை தவிர்த்துநிற்க, அக்குறிப்பையறிந்து, ஆழ்வாரும் வேறோர்அகத்து மேடையில் சென்று வீற்றிருந்தார். வேதாத்தியாயிகள் மீண்டும் வேதபாராயணம் செய்யத் தொடங்கி, விட்டவாக்கியம் தோன்றாது மயங்கி, வந்த அதிதியை அலக்ஷியம் செய்ததே என்றறிந்து, அவரிடம் சென்று சேர, ஆழ்வாரும் அதனை அறிந்து கறுப்பு நெற்களை கையுகிராலே பிளந்து அவர்கள் விட்டசொற்றொடரை, குறிப்பித்தருளிய மாத்திரத்திலே "கிருஷ்ணாம் வ்ரீஹீணாம் நகநிர்பின்னம்" என்ற வேதவாக்கியம் அவர்களுக்கு தோன்றிற்று. உடனே அவர்கள் இவரை பிரதக்ஷிணப்ரணாமாதிகளால் உபசரித்து கிருதார்த்தராணர்கள் என்றும், அப்போது அவ்வூர் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற சுந்தரராஜப் பெருமாள் இவ்வாழ்வார் எந்தெந்தமுகமாகத் திரும்புகின்றனரோ அந்தந்த முகமாய் திரும்பியருள, அவ்வாச்சரியத்தை அர்ச்சகர்மூலமாயறிந்து, அவ்வூரார் அனைவரும் அங்கு யாகஞ்செய்துக் கொண்டிருந்த பெரும்புலியூரடிகளிடதே சென்று, இச்சங்கதியை சொல்லச் தீக்ஷிதரும் வந்து ஸ்ரீபக்திசாரரைக் கண்டுகளித்து யாகத்திற்கு எழுந்தருளவித்துக்கொண்டுபோய் அவருக்கு அக்ர பூஜைசெய்திட்டார். அதைக்கண்டு அசூயைகொண்ட வேதியர்கள் அவரைநிந்திக்க, தீக்ஷிதரும் அவர்களை யடக்கி யருளவேண்டுமென்று ஆழ்வாரைபிரார்த்திக்க, ஆழ்வாரும்

"அக்கரங்களக்கரங்களென்று மாவதென்கொலோ, இக் குறும்பை நீக்கியென்னை யீசனுக்கவல்லை யேற், சக்கரங் கொள்கையனே சடங்கர் வாயடங்கிட, உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே" என்று விஜ்ஞாபிக்க எம்பெருமான் திருமகளும் நிலமகளும் திருவடி வருடப்பெரிய திருவனந்தாழ்வான் மீது அறிதுயிலமரும் திருவுருவத்தை இவரது திருமேயினிலே, தோற்றுவிக்க அனைவரும் அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவித்து ஆழ்வாருடைய அபாரமான விபவத்தை உணர்ந்து, அவருடைய திருவடித் தாமரைகளிலே ஸாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து அபராதக்ஷாமணஞ் செய்து கொண்டார்கள் என்கிற ஐதிஹ்யம் பிரசித்தமிறே.

## 83 கஞ்சனூர்.

ப்ரபாவம்.—சுந்தரராஜப்பெருமாள், சௌந்தர்யவல்லித்தாயார், காவேரிநதி, நின்ற திருக்கோலம், கிழக்கே திருமுகமண்டலம், காவேரிக்கு ப்ரத்தியக்ஷம்.

இது ஆடுதுரை ஸ்டேஷனுக்கு வடக்கே 3-மைலில் இருக்கின்றது.

## 84. செஞ்சி.

இங்கு 400 முதல் 600 அடிகள் வரையில் உயர்ந்திருக்கும் மூன்று மலைகளுக்கிடையில் இராஜகிரி என்னும் மலை மிசை 7-மைல் விஸ்தீரணமுள்ளதாய் கட்டப்பட்ட கோட்டைக்குள் புராதனமான ரங்கநாதன் சன்னிதி விசேஷம். மகம்பதியர்கள் பயத்திற்காக கொண்டுவந்து இங்கு மறைத்து வைத்திருந்த ஸ்ரீ ரங்கநாதர் உத்ஸவவிக்ரஹத்தை ஸ்ரீ மணவாளமா முனிகள் மறுப்படியும் ஸ்ரீரங்கத்துக்குக்

கொண்டு போனதாகச் சொல்லப்படுகிறது. இந்தக்கோட்டையின் அற்புதக்காக்ஷி அனைவரும் பார்க்கததகுந்தது.

இது திண்டிவனம் ஸ்டேஷனுக்கு மேற்கே 18மைலிலிருக்கின்றது. வண்டிகளுண்டு.

## 85 மணக்கால்.

இது மணக்கால்நம்பி அவதாரஸ்தலம். பெரியதொரு ஸ்மார்த்தகிராமம், வரதராஜப்பெருமாள் கோயில் பிரசித்தம். இது ஸ்ரீரங்கத்துக்கு வடகிழக்கே 8-மைலிலுள்ள லால்குடிக்கு வடகிழக்கே $\frac{1}{2}$மைலில் இருக்கின்றது.

## 86 பாபநாசமலை.

ப்ரபாவம்:—சிம்மகிரி. நரசிம்மஸ்வாமி, லக்ஷ்மிதேவி, பாபநாசதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம். இது சேலம் துக்கு மேற்கே 1-மைலில் இருக்கிறது.

## 87. நாமக்கல்.

இந்த ஊர் மத்தியில் ஒரு சிறு மலை இருக்கின்றது. இதை சாளிகிராமம் என்று சொல்லுகிறார்கள். ஹனுமார் இமய மலைக்குச் சென்று சஞ்சீவிமலையை கொண்டு வரும் போது கண்டகீ நதியிலிருந்து கொண்டுவந்த சாளிகிராம சிலையை இங்கு ஸ்தாபித்ததாகச் சொல்லப்படுகிறது. ஆகையால் இது சாளிகிராம க்ஷேத்திரம் என்று வழங்கி வருகிறது.

இந்த மலைக்கு மேற்புறத்தில் நரசிம்ம ஸ்வாமி ஸந்நிதியும் கீழ்புறத்தில் ரங்கநாதன் சந்நிதியும் இருக்கின்றன.

மலைக்கு மேற்க்கே சிறிது தூரத்தில் ஹனுமார் கோயில் ஒன்றுளது. ஹனுமார் அதிகம்பீரமாய் சேவை சாதிக்கின்றார். கமலாலயமும் நரசிம்மதீர்த்தமும் முக்கியமானவை.

தாயாருக்கு நாமகிரி அம்மா* என்று திருநாமம். லக்ஷிமிதேவி கமலாலயத்தில் பெருமாளைக்குறித்து தபசு செய்ய, பிரீதியடைந்த நரசிம்மன் தாயாருக்கு பக்தர்களுடைய வியாதிகளை நிவர்த்திக்கவும், பேய் பிசாசுகளை போக்கவும், ஸ்திரீகளின் மலட்டுத்தன்மையை நீக்கவும், அவர்கள் அபேக்ஷிதங்களை கொடுக்கவும் வரமளித்தாராகையால், இங்கு தாயாருக்கு முதல் பூஜை செய்யப்பட்டு வருகின்றது.

இது சேலத்திலிருந்து 34 மைலும்,* சங்கரிதுர்கத்திலிருந்து 26-மைலிலும்,* கரூரிலிருந்து 20-மைலிலும் இருக்கின்றது. மோட்டோர் பஸ்ஸுகளும் ஜட்காவண்டிகளுமுண்டு. சங்கரிதுர்க்கத்திலிருந்து போனல் வழியில் 6-வது மைலில் பிரபல சிவஸ்தலமாகிய

திருச்செங்கோடு இருக்கின்றது. அழகிய ஊர். சத்திரங்களும் ஹோட்டல்களும் கிளப்புகளும் இருக்கின்றன. எந்த சிவக்ஷேத்திரங்களிலுமில்லாத 6அடி உயரத்தில் வெள்ளைக்கல்லில் உருவத்தோடு அமைக்கப் பெற்ற அர்த்தநாரீச்சுவரர் சேவைக்குறியது. மலைமேலுள்ள இந்த சிவாலயத்தில் ஆதிகேசவப்பெருமாள் சந்நிதி தனிமையாக அமைக்கப் பெற்று வடகலை திருநாமமிட்டு வைணவாராதம் செய்யப்பட்டு வருகிறது.

கொங்குநாட்டிலுள்ள கருவூர், பூண்டி, பவானி, பேரூர் முதலிய எல்லா சிவ ஷேத்திரங்களிலும் சிவாலயத்துக்

குள்ளேயே விஷ்ணுவாலயம் தனியாக அமைக்கப் பெற்றுள்ளது. பெருமாளுக்கு திருமண்காப்பு சமர்ப் பித்துபிரதக்ஷகவே ஆராதனை செய்யப்பட்டு வருகின் றது. கொங்கு நாட்டில் மட்டிலும் வைதிகமான வைணவாலயங்கள் தனிமையாக வில்லாமல் சிவாலயங் களிலேயே பிரதிஷ்டை செய்திருப்பதற்கு யாது காரணமோ அறிகிலோம்.

## 88. கதிரி

பிரபாவம்- நரசிம்மஸ்வாமி, லக்ஷ்மிதேவி, நரசிம்ம தீர்த்தம், பிருகுதீர்த்தம், அர்ச்சுனதீர்த்தம், கதிரி விருக்ஷம், பிரஹ்லாதாழ் வானுக்கு ப்ரத்யக்ஷம். கதிரி விருக்ஷத்தைப் பிளந்துக் கொண்டு வெளிதோன்றியபாவனை. திரிகாலபூஜை நடக்கின்றது திருப்பதியில் போல ஸதா உத்சவங்கள் நடத்தப்படுகின்றன. கற்பூரஹாரதிக்கு, ரூ 1. ஸஹஸ்ர நாமார்ச்சனைக்கு, ரூ. 1-4- அஷ்டோத்தரத்திற்கு, அணா 10. பஞ்சாம்ருத அபிஷேகத்திற்கு. ரூ. 3.

இது **M. S. M. Ry.,** தர்மாவரம்-பகாலா லைனில் கதிரி ஸ்டேஷனுக்கு ½மைலிலிருக்கிறது. சத்திரமிருக்கிறது. கோயிலிலும் வசதியுண்டு.

## 89. புஷ்பகிரி

இந்த க்ஷேத்திரம் வடபெண்ணாற்றங்கரைமேல் விளங்குகின்றது. இதை வைணவர்கள் திருமலை மத்திய அஹோபில மென்றும், சைவர்கள் மத்திய கைலாச மென்றும் சொல்லுகிறார்கள்.

கேசவஸ்வாமி சந்நிதியும் இராகவஸ்வாமி சந்நிதியும் காசிவிசுவநாதர் ஆலயமும் ஸ்ரீமத் சங்கராசாரியர் மடமும் இருக்கின்றன.

இது கடப்பையிலிருந்து கற்சாலை மார்கமாய் 10 மைலிலும், கமலாபுரம் ஸ்டேஷனிலிருந்து வடக்கே 5மைலிலும் இருக்கின்றது. வண்டிகள் கிடைக்கும். சத்திரமிருக்கின்றது. ஹோட்டலில்லை. மிக்கவசதியுள்ள இடம்.

## 90. துவாரகா திருமலை

சுதர்சன க்ஷேத்திரம். ஸ்ரீ வேங்கடாசலபதி, அலர் மேல் மங்கைத்தாயார், சுதர்சன புஷ்கரிணி, நரசிம்ம தீர்த்தம், தெங்கலை சந்நிதி, வைகானச ஆராதனம்.

இது **M.S M. Ry., Bheemadole** ஸ்டேஷனுக்கு மேற்கே 11 மைலில், 48 படிகட்டுகளையுடைய மலை மிசையிருக்கின்றது. வண்டிகள் கிடைக்கும் சத்திரமிருக்கிறது. இந்த மலையிலுள்ள பெரிய பாறைகளை உடைத்தாலும் சிறுகற்களை உடைத்தாலும் அதில் சுதரிசனமிருக்கும். அற்புதக்காக்ஷி.

## 91. திரியம்பகம்

இது கோதாவிரிநதியின் உத்பத்தி ஸ்நானம். கோமுகி போன்ற ஒரு கற்பாறைனூடேயுள்ள குகையினின்றும் கோதாவிரிநதி உத்பவித்து பிரவஹிக்கிறது. திரிமூர்த்திகளுக்கும் இங்கு ஆலயமுள்ளனவாயினும் சிவாலயம் பிரசித்தம. இதை ஒரேநாளில் பார்த்துவரவேண்டும். குளிர் தாங்கமுடியாது. பஞ்சவடியிலிருந்து வடமேற்கே 20-மைலில் இது இருக்கின்றது. மார்க்கமத்தியில் ஆறுமைலிலுள்ள கங்காபூரில் ஒன்பது ஆலயங்களும் கோதாவரி மலை உச்சியிலிருந்துவிழும் காக்ஷி அத்யாச்சரியம்.

## 92 ஸித்தபுரம் (மாத்ருகயை)

இது B B & C. I. Ry., பம்பாயிலிருந்து அமதபாத் மார்க்கமாய் டில்லிக்குப்போகும் லைனில் Sidhpur சித்பூர் ஸ்டேஷனிலிருந்து இரண்டுமைல் தூரத்திலிருக்கிறது. வண்டி வசிதிகளிருக்கின்றன. இவ்விடத்திலும் பண்டாக்கள் அதிகம் அவர்கள் வீடுகளிலும் தங்கலாம். துவாரகை மடத்தை சார்ந்த சங்கராசாரியமடம் இங்கொன்றிருக்கிறது. தனிகர்களான யாத்திரைக்காரர்கள் இம்மடத்தில் ஸஹஸ்ர போஜனம் செய்து வைக்கிறார்கள்.

இந்த க்ஷேத்திரத்தில்தான் கபில தேவஹூதி ஸம்வதமானது நடந்ததென்று ஐதிஹ்யம். இறுதியில் புத்திரனால் உபதேசமடைந்த மாதா இவ்விடத்தில் சித்தியடைந்தமையால் இதற்கு மாத்ருகையை என்று பெயராயிற்று. மாதவை மாத்திரம் இழந்தவர்கள் முதல் வருஷமானவுடன் இவ்விடத்தில் பிண்டம் போட்டு மாதாவுக்கு முத்தியுண்டாக்க இவ்விடம் வந்து சிராத்தம் செய்கிறார்கள். எப்போதும் யாத்திரைகாரர்கள் வந்து கொண்டே இருக்கிறார்கள்? ஸரஸ்வதீநதி சமீபத்தில் ஒரு குண்டம் இருக்கின்றது. அதன் கரையின்மேல் ஒருகபில மூர்த்தியும் தேவஹூதியில் ஒரு மூர்த்தியுமிருக்கின்றன. அக்குண்டத்தில் தான் பிண்டம் போட வேண்டியது. கண்ணன், கர்த்தம பிரஜாபதி கோயில்களுமிருக்கின்றன.

துருக்கர்கள் காலத்தில் நம்பரதகண்ட க்ஷேத்திரத்தில் அதிக மான சித்திர வேலைகளுடன் அமைக்கப்பட்ட சிலைகளெல்லாம் உடைக்கப் பட்டு சிதரிக்கிடைப்பதைக் காண கண்களின் நீர் வடிகிறது. அபூர்வமான சித்திரைவேலையுடன் கூடிய முன்முக மண்டபத்தை வெவ்வேராக பிரிக்க

முடியாதபடி—முரட்டுக் கல்லுகளால் கட்டப்பட்டிருப்பதால் அதை அப்படியே விட்டுவிட்டார்கள். அதைப் பார்த்தவர்கள் ஆச்சரியப்படாமலிரார், மூலஸ்தான கோபுரத்தை பாதியிடித்து அதை மசீதியாக வைத்திருக்கிறார்கள், லிங்கத்தைப் பேர்த்து உடைத்து எறிந்து விட்டிருப்பதைக்காண சகிக்கமுடியவில்லை. காசியில் விசுவநாதன் கோயில் போல் இதுவும் மசீதியைச் சேர்ந்தே இருக்கிறது. இதுவுமன்றி இந்த க்ஷேத்திரத்திலுள்ள அந்தணர்களை பலாத்காரப் படுத்தி தங்கள் மதத்தில் சேர்த்துவிட்டதால் பாதிப்பேர் இப்போதும் துருக்கர்களாகவே யிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் தங்கள் வீட்டுப் பெயர்களை இன்னும் விடவில்லை. இவர்கள் அன்னிய தேசங்களுக்குப் போய் வியாபாரம் செய்து கொண்டு தனவந்தர்களாயிருக்கின்றனர். புண்ணியம் சம்பாதித்துக் கொள்ள க்ஷேத்திர தீர்த்த யாத்திரையாக வந்த யான் இதை எல்லாம் பார்க்கும் பாப மிருந்தபடி என்?

## 93. சித்திரகூடம்

ப்ரபாவம்.—சீதாராமன் சந்நிதியும், இன்னும் அநேக ஆலயங்களுமிருக்கின்றன. இங்கு தாசரதி சீதாலக்ஷ்மணருடன் பத்து வருஷம் எழுந்தருளி யிருந்தனர். கோடி தீர்த்தம், திவான்கங்கா, ஹனுமந்தாரா, பாடக்சிலா, அன்ஸ்யா, குப்தகோதாவிரி, பரத்கூபம், இவைகள்முக்கியமான தீர்த்தங்கள்.

மார்க்கமும் வசதிகளும். — இது (G. I. P. Ry., (Karvi) கார்விஸ்டேஷனிலிருந்து 3-மைலிலும், சித்திரகூடம் ஸ்டேஷனிலிருந்து 3-மைலிலும், சீதாப்பூரிலிருந்து 5-மைலிலுமிருக்கின்றது. தருமசாலைகளும் மடங்களுமிருக்கின்றன. வண்டிகளுண்டு.

குறிப்பு.—மந்தா்கினி நதியில் ஶ்ராத்தம் விசேஷம். புராணலங்கா என்று ஒரு மடமிருக்கிறது. அம்மடம் மலைக்கு சமீபம். வாசயோக்யமான ஸ்தலம். சதாவர்த்தியும் கொடுக்கிறார்கள். மலைமேல் எங்கும் காடாகையால் பிரதக்ஷணம் செய்வதன்றி அதன்மேல் ஏறுவதில்லை. மலை பன்னிரண்டு மைல் சுற்றளவுள்ளது.

## 94. சீதாபூர்.

ப்ரபாவம்.—மந்தாகினி நதியின் கரையில் சக்கரவர்த்தித் திருமகன் சந்நிதி யிருக்கிறது. யாத்திரிகர்கள் நதியில் நீராடி தீர்த்த சிராத்தம் செய்து அப்பரமனை தரிசிப்பர்.

இது (G. I. P. Ry.) கார்விபட்டணத்திற்கு 5-மைல் தூரத்தில் பைசுனி நதியின் வடகரையிலிருக்கின்றது. இவ்விடத்தில் எல்லா வசதிகளுமுண்டு. இவ்வூரில் பெரும்பாலோர் தென்னாசாரிய சம்பிரதாயஸ்தர்களாக யிருக்கிறார்கள்.

## 95 வால்மீகி ஆஶ்ரமம்

இது மணிக்பூர் ஜங்ஷனிலிருந்து சித்ரகூடம் செல்லும் ரஸ்தாவிலிருக்கிறது. குருவி ஸ்டேஷனுக்கு தெற்கேமூன்று மயில் தூரத்திலுள்ளது. வால்மீகி ஆஶ்ரமமென்னும் பெயரே ஊருக்கும் பெயராயிருக்கின்றது. ஊருக்குச் சிறிது தூரத்தில் வால்மீகிநதிக்கரையில், ஒருசிறுகுன்றின் மேலே பகவான் வால்மீகி ஆஶ்ரமம் சிலபாகவதர்களால் சூழப்படுவிளங்குகின்றது. அவ்விடத்தில் ஸ்ரீவால்மீகி மகரிஷி ஸந்நிதியிருக்கின்றது.

## 96 பரத்வாஜாஸ்ரமம்

இது யமுனை நதியின் உத்தரதீரத்தில் இருக்கின்றது. வெகு ரமணீயமானது. இவ்விடத்தில்தான் ஸ்ரீ ஸீதாலக்ஷ்மண பரிவாரங்களுடன் கூடின ஸ்ரீராமமூர்த்திக்கு பரத்வாஜ முனிவர் காமதேனுவைக்கொண்டு விருந்தளிக்கப்பட்டது. இதுவால்மீகி ஆஸ்ரமத்துக்கு வடக்கே 35-மயிலிலும் மணிக்ப்பூர் ஜங்ஷனிலிருந்து பிரயாகைக்குச் செல்லும் ரஸ்தாவில் சங்கர்கார் ஸ்டேஷனிலிரங்கிச் சென்றால் 18-மைலிலும் இருக்கின்றது. வண்டிகளும் ஸௌகர்யங்களும் உண்டு.

## 97 நந்தி கிராமம்

ஸ்ரீ ராமபிரான் வனவாசம் சென்றிருந்த காலத்தில் அவரது ஆக்ஞைப்படி இவ்விடத்தில் ஸ்ரீ பரதாழ்வான் ஸ்ரீ ராம பாதுகையை சிம்மாசனத்தில் எழுந்தருளச் செய்து அரசு செலுத்திய ஸ்தலம்.

அழகான படித்துறைகளோடு கூடிய பரதகுண்டம் என்ற ஒரு பெரியதடாகமும் அதன் மேற்கரையில் காளி, கௌரிசங்கர் ஆலயங்களும் தென்பக்கம் கயாகுண்டமும் இருக்கின்றன. இங்குயாத்திரிகர்கள் பிதிர்களுக்கு பிண்டபாதானம் செய்து போகுரார்கள்.

இது அயோத்தியிலிருந்து பிரயாகைக்குச் செல்லும் ரோட்டில் 14-மைலிலிருக்கின்றது. அயோத்தியிலிருந்து வண்டிகிடைக்கும்.

## 98 புஷ்கரம்

ப்ரபாவம்.—பரமபுருஷன், புண்டரீக வல்லித்தாயார், மங்கள விமானம், புஷ்கர தீர்த்தம், கிழக்கே திருமுக மண்டலம், வீற்றிருந்த திருக்கோலம், பிரமதேவருக்கு ப்ரத்யக்ஷம். இங்கு பிரமாலயம் மிகப்பிரபலமானது. அஷ்ட சுயம்பு ஸ்தலங்களில் ஒன்று. இங்கு பகவான் தீர்த்தரூபியாயிருக்கின்றார்.

மார்க்கமும் வசதிகளும்.—இது Ajmir ஆஜ்மீர் ஸ்டேஷனுக்கு தென்மேற்கில் 7-மைலிலிருக்கிறது. வண்டிகளுண்டு. தர்மசாலைகளிருக்கின்றன. இங்கு பதரி நாயாயணன் சந்நிதியும், வராகஸ்வாமி சந்நிதியு மிருக்கின்றன. இங்கு சென்னைஸ்வாமிகள்தான் திருவாராதனஞ் செய்கிறார்கள். இவ்விடத்திலும் பிருந்தாவனத்திலும் அயோத்தியிலும் நம் தேசத்து ஆசாரப்படி இயல்சேவை செய்து தீர்த்தப்ரசாதங்கள் கொடுக்கின்றனர். பாஞ்சராத்திர ஆராதனம். தெங்கலை சந்நிதி. இதில் பாகனோடு கூடிய இரண்டியானைகள் சலவைக்கல்லினால் செய்யப்பட்டிருக்கின்றன. இங்கிருக்கும் பெரிய பிள்ளையார் விக்கிரகத்திற்கு தெங்கலைதிருநாமம் விலக்ஷணமாய் சாத்தப்பட்டிருக்கின்றது. பிரம்மா தபசு செய்தயிடத்தில் அவருக்கும் அவர்பத்தினிகளுக்கும், தனித்தனியாய் பிரஜாபதி, காயத்ரி, சாவித்ரி, ஸரஸ்வதி குன்று களென நாங்கு குன்றுகளிருக்கின்றன. போகிறவர்கள் திருமண் கதிர் கொண்டு கொடுத்தால் அவர்களுக்கு வெகு சந்தோஷம். இங்கு தாமரைமணிகள் கிடைக்கும். அவசியம் வாங்கத்தக்கது. 2-மைலில் வெகு அருமையான தீர்த்தமிருக்கிறது. அவ்வூராரைக் கொண்டு அவசியம் ஸ்நாநம் செய்யவேண்டியது. வெயிற்காலத்தில் சந்நிதியிலாகிலும் தெருவிலாகிலும் அடிவைக்க முடியாது. காலை

10-மணிக்குள் சமையல் முதலானதைத் முடித்துக்கொண்டு நாலுமணிவரையிலும் வீடுகளில் பதுங்கியிருக்க வேண்டும். ஏரியில் முதலைகள், விசேஷம்.

## 99 அவந்திகை.

ப்ரபாவம்.—கண்ணன்நாராயணன், திருமாமகள் நாச்சியார். தாரகவிமானம், நித்யபுஷ்கரிணி, தேவபுஷ்கரிணி வடவிருக்ஷம். தெற்கே திருமுக மண்டலம். நின்றும் கிடந்தும் விளங்குந் திருக்கோலம். தேவர்களுக்கும், சாந்தீப முனிவருக்கும் ப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது Ujjain உஜ்னி என்ற ஓர் அழகிய பட்டணம். சந்நிதி ஸ்டேஷனுக்கு ஒரு மைல் தூரத்திலிருக்கிறது, தர்மசாலைகளுமிருக்கின்றன. இது முத்திநகர் ஏழினுள் ஒன்று. இந்நகர்வாசியாகிய சாந்தீப முனிவரிடத்தில் கண்ணபிரான் வேதாத்யனம் செய்தனன்

## 100 பிருந்தாவனம்

ப்ரபாவம்—ராதாவல்லபன், ராதாதேவி, வஸ்திராபஹரண தீர்த்தம், யமுனாநதி, கிழக்கேதிருமுகமண்டலம், நின்றதிருக்கோலம், ராதாதேவிக்கு பிரத்யக்ஷம்.

கண்ணபிரான் திருவவதாரஞ் செய்து திருவாயர்பாடியில் வளர்ந்தருளிய பிறகு யாதவரெல்லாம் விருந்தாவனத்தில் குடியேறினர். ஆங்கு கண்ணபிரான் அனேக அற்புதாநந்தலீலைகளைச் செய்தருளினதை ஸ்ரீபாகவதாதிபுராணங்களில் விசதம்.

இங்கு முக்கியமாய் தரிசிக்க வேண்டியவைகள்.

1 யமுனைக்கரையோரமாய் 32 ஸ்நானகட்டங்கள் இருக்கின்றன.

2 காளிங்க மடு, 3 கடம்ப வருக்ஷம்,

4 க்ஷீரகாட் (வஸ்திராபஹரண லீலையை அமைத்திருக்கும் காட்சி)

5 கேசிகாட், 6 வில்வவனம் (லட்சுமி நிவாசம்)

7 நிதுவனம் (இராதா நிவாஸம், இங்குள்ள அனேக வித பட்சி ஜாலங்களும் வானரக்கூட்டங்களும் மற்றெந்த உயிர் பிராணிகளும் இராக்காலத்தில் இங்கு தங்குவதில்லையாம். ஆச்சரியம்.)

8 கோபீஸ்வர மஹாதேவர் (பகவானுடைய அற்புதலீலைகளைக்காண சிவபிரான் கோபிகாஸ்திரிவேஷம் பூண்டு சில காலம் கண்ணனுடன் வசித்துவந்தனர் எனச்சொல்லப்படுகிறது)

9 ரங்கமந்திரம் (கோவர்த்தனம் ரங்காசாரியஸ்வாமிகள் விசேஷபொருள் செலவிட்டு ஸப்தபிராகாரத்தோடு கட்டி வைத்திருக்கின்ற ரங்கமன்னார் சந்நிதி. இந்தச் சன்னிதியில் தென்னாட்டு ஸ்ரீ வைஷ்ணவஸம்ப்ரதாயப்படி பாஞ்சராத்ராகமொத்த திருவாராதனை செய்து இயல் சேவைமுடித்து தீர்த்த ப்ரசாதங்கள் வழங்கு கின்றனர். இங்கு இரண்டு வேளைகளிலும் தேசாந்திரிகளுக்கு ஜாதிபேதம் சமயபேதம் பாராட்டாமல் யாவத்திராளுக்கும் அலங்கார ப்ரஸாதம் கொடுக்கபடுகின்றன

இது பிருந்தாவனம் ஸ்டேஷனுக்கு கிழக்கே ½-மைலி லிருக்கிறது. மதுராபட்டணத்திற்கு வடக்கே 6-மைல் தூரத்தில் யமுனையின் கரை மேலிருகிறது. நல்லரோட்டு. வண்டிகளுண்டு. ரங்கமன்னார் சன்னிதியில் இடவசதி களுண்டு.

## 101 கோவர்த்தனகிரி

கோபாலர்களையும் கோக்களையும் ஏழுநாள்வரையில் விடாமல் இந்திரனால் பெய்வித்த கல்மாரியைக் காக்க குடையாக வெடுத்துக்காத்த கோவர்த்தன கிரியானது 10-மைல் சுற்றளவுள்ளது. யாத்திரைக்காரர் அதை வலம் வந்து தண்டம் சமர்ப்பிப்பர், பிரதக்ஷணம் செய்யும் போது மார்க்கமத்தியில் தங்குவதற்கு இடங்கள் உள்ளன.

இது மதுராபட்டணத்துக்கு மேற்கே 9-மைல் தூரத் திலுள்ளது. மதுரையிலிருந்தே வண்டிகளை அமர்த்திக் கொள்ள வேண்டும்.

## 102 பலதேவம்

இந்த க்ஷேத்திரம் மதுராபுரியிலிருந்து 10-மைல் தூரத்திலுள்ளது. பலராமன் சந்நிதி. மூர்த்தி 6 அடி உயர முள்ளது. அழகிய பெரிய ஆலயம். க்ஷீரசாகரம் என்ற தடாகம் ஸ்நாநவிசேஷம். யாத்திரிகர்கள் தங்கு வதற்கு சௌகரிய மில்லாத இடமாகையால் தரிசித்துக் கொண்டு உடனே திரும்பி விடுவது நல்லது. மதுரை யிலிருந்து வந்துபோக வண்டிக்கு வாடகை ரூ 3.

## 103 உகாலக்ஷேத்திரம்.

இது ஸ்ரீ வராஹாவதாரஞ்செய்து இரண்யாக்ஷனைக் கொன்று கோரைப்பல்லால் பூமியை உத்தரித்த சூகரக்ஷேத்திரம். பகீரதன் கங்கைகொண்டுவருமுன்னமே மேருவின் இளையபெண்ணாகிய குடிலாசக்தி கங்கை இங்கு இருக்கிறது.

இது ஹரிதுவாரம் செல்லும் லயனில் உகாலக்ஷேத்திரம் ரெயில் ஸ்டேஷனுக்கு 2-மைலில் இருக்கிறது.

## 104 குருக்ஷேத்திரம்

இந்த குருக்ஷேத்திரம் 1160-சதுரமைல் விஸ்தீரணமுள்ளது. இதில் 352-புண்ணிய ஸ்தலங்களும் தீர்த்தங்களும் இருக்கின்றன. இந்தக்ஷேத்திரம் பிரமதேவரால் தெரிந்தெடுக்கப்பட்ட புண்ணிய ஸ்தலங்களில் ஒன்று. அயநம் அமாவாஸை, பௌர்ணமி, மாதசங்கிரமணம் கிரஹணகாலங்கள், அர்த்தோதயமஹோதய புண்ணிய காலகளில் ஸ்நானம் விசேஷம்.

இது குருக்ஷேத்திரம் ஸ்டேஷனுக்கு மேற்கே 1-மைலில் யமுனையாற்றின்கரைமேல் இருக்கிறது. எல்லா வித சௌகரியங்களு முண்டு.

## 105 ஹரித்துவாரம்

பிரபாவம்.—ஆதிநாராயணன், ஆதிலக்ஷ்மி, ஆனந்த விமானம், ஹரிபாததீர்த்தம், கங்காநதி, புஜங்கசயனம், தெற்கே திருமுகமண்டலம், தக்ஷப்ரஜாபதி நிமித்தமாக அஜருத்திரேந்த்ராதிகளுக்கு ப்ரத்யக்ஷம. சுகரும் பரிக்ஷித்து மஹாராஜனும் தவஞ்செய்த ஸ்தலம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது HARDWAR, ஹரித்துவாரம் ஸ்டேஷனுக்கு 2-மைல் தூரத்திலிருக்கின்றது. வண்டிகளும் தர்மசாலைகளும் இருக்கின்றன, நியூஸென்ஸ் அதிக உபத்திரவம். இவ்வூர் ஜலம் அதிக உஷ்ணமான தால் சீதபேதி முதலானவைகள் உண்டாகும். அதிக நாள் தாமதிக்கலாகாது. வெய்யற்காலத்தில் உஷ்ணம் அதிகம். கால் பூமியில்வைக்கமுடியாது. பனிகாலத்தில் குளிர் சகிக்க முடியாது. இவ்விடத்திலிருந்து 15-மைல் தூரத்திலுள்ள ருஷீகேசத்திற்கு வண்டிகளில் போகலாம். பண்டாக்கள் அதிகம். அவர்கள் அதிக தொந்தரவு செய்வார்கள்.

ஸ்டேஷனுக்கு சமீபமாக தர்மசாலை இருக்கின்றது. பண்டாக்கள் வீடுகளிலும் தங்கலாம், கிருஷ்ணகிரி கிருஷ்ணசாரி என்று நம்தேசத்து ப்ராம்மணர் ஒருவர் இருக்கிறார். அவர் இல்லத்திலேயும் தங்கலாம். மலைக்குப் போகும் போது சாமான்களை இவரிடத்தில் ஒப்பிவித்துப் போகலாம்.

குறிப்பு.—மது தன்னை ஸம்ஹாரஞ்செய்த விஷ்ணு மூர்த்தியை இனி இது புண்ணியஸ்தலமாக எனவேண்டினமையால் அத்தகைய விஷ்ணுமூர்த்தி எழுந்தருளியிருக்கும் புண்ணியதலமாகிய க்ஷேத்திரம். இது ஸப்தபுரியில் ஒன்று. அரித்துவாரம், கங்காத்துவாரம், மாயாத்துவாரம் என்றபெயர்களையுடையது. கங்கைமா நதி ஹிமாசலத்தின் மேலே வந்து இந்த க்ஷேத்திரத்தில்தான் முதலில் பூமியிலிறங்கி சுழன்று செல்லுகிறது. இது வைகுந்தத்திற்கு ஏறும் ஏணியாகவுள்ளது. ஹரிசரணகாட்டிற்கு சமீபத்தில் கங்காதேவி தேவாலயமும் அதன் பிராகாரத்திலுள்ள ஸ்ரீ விஷ்ணு பாதமும் க்ஷேத்திர தரிசனத்திற்கு முக்கியமானவை.

## 106 பிரயாகை

ப்ரபாவம்.—ஆதி முதல்வன், மாதவப்பெருமாள், செங்கமல வல்லித்தாயர், பாவனவிமானம், திருவேணி சங்கமதீர்த்தம், வடவிருக்ஷம், புஜங்கசயனம், கிழக்கே திருமுகமண்டலம், மார்க்கண்டேயருக்குப் பிரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும்.—இது E. I. Ry. ALLAHABAD (PRAYAG) பிரயாகை ஸ்டேஷனுக்கு தெற்கே 3-மைலி லிருக்கிறது. B. N. W. Ry., Izat Bridge. ஐஜெட் பிரிட்ஜிலிருந்து 1-மைல். இது ஒரு பெரிய பட்டணம். அக்பர் இங்கு கோட்டை ஒன்று கட்டி அல்லஹாபாத் (கடவுள் பட்டணம்) என்று பெயரிட்டான். அதனால் இதற்கு அல்லஹாபாத் என்று பெயராயிற்று. வண்டிக ளுண்டு. தருமசாலையுண்டு. பண்டாக்கள் வீட்டில் தாமசிப் பது உசிதம். இங்கு அஹோபில மடமுமிருக்கின்றது.

குறிப்பு.—காசிதண்டம், கயாபிண்டம், பிரயாகாமுண் டம், எனவும் பிரயாகை தீர்த்த ராஜா வெனவும் சொல்லு வர்.

உடைதிரைநீர்ப் பிரளயத்து மார்க்கண்டன்
  முதன்முனிவ ருறைவதாய
வடதருவைப் புனிற்றுமதியலை புரட்டுங்
  கங்கையோடுவனைந்தவேணிக்
கடவுளை வெண்மதி கொழிக்கும் பாலாழி
  துறந்து செழுங்கமலை யோடு
மடியர்துயரகற்றுவலென்றினிதடைந்த
  மாதவனை யாங்கு கண்டான்.

என்று காசிகாண்டம் கூறும்.

பிரயாகையிலிருந்து 95-மைல் தூரத்தில் மொகல்சிரே என்ற ஸ்டேஷனும் அதற்கு 6-மைல் தூரத்தில் காசியும் இருக்கின்றன. காசிக்குப் போக மொகல்சிரேயில் இறங்கி வேறு வண்டி யேறவேண்டும்.

உலக சிருஷ்க்கு முன்னம் ஆதி முதலவன் இவ்விடத்தில் ஆலமரத்தினிலையில் வசித்திருந்தனனாகையால் இந்த ஸ்தலத்திற்கு எப்போதும் நாசமில்லை என்றும், பிரமதேவர் இத்தலத்தில் தசாசுவமேதம்' செய்தனராகையால் தசாசுவமேதகட்டம் என்றும், திருமகள்கேள்வன் வசித்திருந்த காரணத்தால் விஷ்ணுக்ஷேத்திர மென்றும், பிரமதேவர் தன்பெயரும் விளங்கும் படி பிரார்த்தித்தமையால் பகவதாக்ஞையினால் விஷ்ணு பிரஜாபதி க்ஷேத்திர மென்றும், யாகங்களுக்கு பிரதான ஸ்தலமாகையால் ப்ரயாகை க்ஷேத்திரமென்றும், இந்த க்ஷேத்திரத்திலுள்ள வடவிருக்ஷத்தின் மூலத்திலிருந்து சிவபிரான் அதை எப்போதும் காத்து வருகிறார் என்றும் வடபத்திரசாயியாகிய ஸ்ரீ மகா விஷ்ணு அத்தருவினிலையில் என்றும் பள்ளி கொண்டிருக்கிறார் என்றும், பிரளய காலத்தில் மார்க்கண்டேயர் முதலிய முனிவர்கள் அத்தனி முதற் கடவுளது திருவயிற்றில் புகுந்திருந்தனர் என்றும், பூர்வம் சாயாதேவி கர்ப்பமாயிருந்த போது சூரியன் ஸம்ஶ்லேஷத்தால் சிறிதுபாகம் பிண்டமாயும், சிறிது பாகம் த்ரவமகாவும் ஸ்த்ராவமானதால் ஹரிஹரர்கள் அவ்விடத்துக்கு வந்து த்ரவரூபத்தை யமுனாநதியாகவும் பிண்டரூபத்தை யமதருமனாகவும் கற்பித்தருளினார்கள். பிறகுபகீரதனால் கொண்டு வந்த கங்கையும் யமுனையோடு கலந்தது. பிறகு இந்த ஸ்தலத்தை பிரமதேவர் தன்னால் துதிக்கவியலாது தம் தாமமடைய அப்போது ஸரஸ்வதி தான் வருணிப்

தாகச் சொல்லி பிரையாகைக்கு வந்து வருணிக்கமுடியா மல் விசனித்திருக்க கங்கையும் யமுனையும் ஸரஸ்வதியை தங்களோடிருக்க ப்ரார்த்திக்க, ஸ்ரஸ்வதி அவர்களைநோக்கி நான் உங்களைப் போல் இவ்விடத்தில் விளங்கி இருந்தால் பிரமதேவரைப் பார்த்து நான் லஜ்ஜை யடைய வேண்டிய தாயிருக்கு • மாகையால் நான் குப்தகாமினியாய் இருக்கி றேன் என்று சொல்ல அவர்களும் அங்கீகரித்தன ரென்றும் இவ்விடத்தில் யாதொருசிறிய தானம் செய்யினும் அது பெரிய தொருபலனைத் தருமென்றும் ஸ்தலமான்மியம் கூறும்.

திரிவேணி—கங்கை பச்சிமவாகினி யாகவும் யமுனை பூர்வவாகினியாகவும் ஸரஸ்வதி அந்தர்வாகினியாகவும் இங்கு வந்து ஒன்று கூடுவதால் இதற்கு திரிவேணி என்று பெயராயிற்று.

இவ்விடத்தில் ஸ்நானஞ் செய்வதனால் பிறவித்துன்பங் கள் நீங்குமென்பது புராண பிரசித்தம். ஸ்ரீமத் சங்கரா சாரியஸ்வாமிகளும் இங்கு வந்தபோது தனது தாயாருக்கு பிண்டஶ்ராத்தம் செய்ததாக சங்கரவிஜயம் கூறுகின்றது. யாத்திரிகர்கள் சுத்த கங்கை எடுத்துப்போவது இங்குள்ள கலப்பற்ற சுத்த கங்கையிலேதான். தீர்த்தங்களில் முக்கிய மாய் தரிசிக்கவேண்டியவை.

திரிவேணிம் மாதவம் சோமம்
பாரத்வாஜஞ்ச வாசுகீம்
வந்தே அக்ஷயவடம் ஶேஷம்
ப்ரயாகம் தீர்த்தநாயகம்.

1 திரிவேணி (முக்கிய ஸ்நான கட்டம். வழியில் பாதாள அனுமார்தரிசனம்.) 2 மாதவஸ்வாமி (தாராகஞ்சில் ரோட்டு மார்கத்திலுள்ளது.) 3 சோமேசர் (யமுனையாற்றின் கீழ்

கரையிலுள்ளது.) 4 பரத்துவாஜாஶ்ரமம் (இராமர், சீதை ஹநுமார் சந்நிதிகளிருக்கின்றன. பட்டணத்தின் மேற்கிலுள்ளது.) 5 வாசுகி (சர்ப்பதரிசனம்)
6 அக்ஷயவடம் (கோட்டைக்குள்; இதுவும், பஞ்சபாண்டவர் வியாசர் வால்மீகர், சரஸ்வதி, நரசிம்மன் முதலியோருடைய சிலா விக்கிரகங்களும் முக்கியதரிசனம்.)
7 சேஷேஶ்வார் என்ற லிங்கமூர்த்தி

## இதுவன்றியில்

CHOWK சகர் (என்னும் சவுக்கு.)
HIGH COURT (இவ்வளவு அழகான ஹைகோர்ட்டு கல்கத்[தாவிலு மில்லை)
ALLAHABAD COLLEGE (முதல்தரமான கட்டடம்)
ALFRED PARK (ஆல்ப்ரட்டு பார்க்கு)
MACPHARSON PARK (மக்பார்சன் பார்க்)
KHUSRU BAGH (குச்ரூ பாக்) இவைகளும் காக்ஷிக்குறியன.

குறிப்பு:— இதற்கு மேலெழுத இப்புத்தகம் இடந்தரவில்லை. மற்றமுழுவிவரங்களையும் எனது காசியாத்திரை என்னும் புத்தகத்தில் தெரிந்து கொள்க.

## 107 கயா.

பிரபாவம்—ஸ்ரீமத்கயாவில் பல்குனிநதிக்கரையின்மேல் இருக்கின்ற கோயிலுள் விஷ்ணுபாதமும் அதனைச் சூழ்ந்து பிரமபாதம் ருத்திரபாதம், முதலிய 18 தேவர்களின் பாதங்களுமிருக்கின்றன. இவ்விடத்தில் பல்குனிநதி-உத்தரமானசதீர்த்தம், தக்ஷிணமானஸதீர்த்தம், உதீசி, தீர்த்தம், கனகதீர்த்தம் என்று பஞ்சதீர்த்தங்களுண்டு.

ஆதிகாலத்தில் கயாசுரன் என்னும் அரக்கனொரு வன் கடுந்தவமியற்றி தனது சரீரம் அதிபவித்திரமாக வேண்டுமென்று பரமனிடத்தில் வரமடைந்து கருவித்திருக்க பிரமதேவர் அவன் இறுமாப்பை அடக்கக்கருதி அவனிடமேகி அவன் சரீரத்தின் மீது தான் யாகமொன்று செய்யநினைத்திருப்பதாகக்கூற, அவனும் சம்மதிக்க, அவனைப்படுக்கவைத்து அவன் மேல் யாகம் செய்யத்தொடங்க, அவன் சிரசு ஆடிக்கொண்டிருந்தது. அவன் தலையாடவொட்டாமல் எத்தனை பர்வதங்களை கொண்டுவைத்தும் அசைந்துக்கொண்டிருக்க, புருஷனது சாபத்தினால் ஒரு பதிவிரதை சிலாரூபமாயிருந்ததைக் கொணர்ந்து தலையின் மீதுவைத்தனர். அப்போதும் சிறிது அசைதலைக் கண்டு தேவர்கள் சிந்திக்க, விஷ்ணுமூர்த்தி அந்த சிலைமிசை தன்பாதத்தைவைத்து அசையாதிருக்கச்செய்தனர். பிரமதேவரும் வேள்வியை முடித்தனர். கயாசுரனும் சிலாரூபமாயிருந்த பதிவிரதையும் விஷ்ணுமூர்த்தியைப்ராத்திக்க, பகவான் அப்போது சேவைசாதித்த வண்ணம் எப்போதும் இங்கு கதாதர ஸ்வாமியாய் வஸித்துக்கொண்டு வருகிறார்.

இந்த க்ஷேத்திரத்தில் பல்குநதியில் நீராடிசிராத்தம் செய்து விஷ்ணுபாதத்தில் பிண்டபிரதானம் செய்வர். பிரயாகா முண்டம், காசிதண்டம், கயாபிண்டம் எனவும், பாண்டு ரங்கம் நாதப்ரம்மம், ஜகந்நாதம்அன்னப்ரம்மம், ஸ்ரீமத்கயாபிண்டப்ரம்மம், எனவும் கயா • க்ஷேத்திரராஜா எனவும் ப்ரயாகை தீர்த்தராஜாஎனவும் சொல்லுவர். கோயிலுக்கு சிறிது தூரத்தில் கட்டடங்கள் மத்தியில் ஒருவடவிருக்ஷமிருக்கின்றது. யாத்திரைக்காரர்கள் அதனைவலம் வந்து தண்டம் சமர்ப்பித்து அர்ச்சிப்பார்கள். இந்த க்ஷேத்திரத்தில் க்ஷவரமும் ஸ்தல உபவாசமும் செய்ய வேண்டுவதில்லை.

அருகாமையிலிருக்கும் ராமபர்வதமென்கிற ப்ரேத பர்வதத்தின்மீது அஷ்டாகயா ஸ்ராத்தம் செய்வதனுல் பித்ருதேவர்கள் திருப்தி அடைகிருர்கள் என்று சொல்லப்படுகிறது.—

மார்க்கமும் வசதிகளும்.—இது GYA கயாரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 3-மைல் தூரத்திலிருக்கின்றது. வண்டிகளும், தர்மசாலேகளுமிருக்கின்றன. இவ்விடத்தில் நந்தேயத்து பிராமணர்கள் அநேகர்கள் குடிஏறியிருக்கின்றனர். காசியைப்பார்க்கிலும் அதிகயாத்திரைக் காரர்கள் பித்ருகடனைத் தீர்க்கும்பொருட்டு இங்கு வந்துக்கொண்டிருக்கிருர்கள். பண்டாக்கள் (வைதிக கருமங்களே செய்துவைப்பவர்) கயாவாலர்கள் தொந்தரவு அதிகம், அவர்களைக் கொண்டுதான் பித்ரு காரியங்களே நடப்பிக்கவேண்டியது.

காசியிலும் பிரயாகையிலுமுள்ள நம்திராவிடதேசத்தார் இக்கயாவுக்கு வருமுன்னமே நம்மிடத்தில் இக்கயாவாலர்களுக்கு நிற்பந்தப்படுத்தி சீட்டுகொடுக்கிருர்கள். முன்பு ஒருவனுடைய ஆஸ்தியில் பாதிவிலேயிலிருந்த கயாசிராத்தம் இப்போது ஐந்துரூபாய்விலே மதிப்பில்வந்திருக்கிறது. கயாசிராத்தத்தில் விஷ்ணுபாதம் ஒன்றில் மட்டும் பிண்டம் போடுவது எல்லோரும் செய்யத்தகுந்தது.

ஸ்ரீமத்கயாக்ஷேத்திரம், சுருதிகளாலும், ஸ்மிருதிகளாலும், புராணங்களாலும் க்ஷேத்திரமொன்றனேயும் புகலாக இதிகாசஸ்ரேஷ்டமாகிய ஸ்ரீராமாயணத்தாலும் சொல்லப்பட்டது. கயாஸ்ராத்தம் செய்யாத புத்திரன் புத்திரனல்லன், அவனேப்பெற்றோரும். புத்திரனைப் பெற்றோரல்லர் என்று அற நூல்பகரும். இதற்கு ஏழுமைலிலுள்ள பௌத்தகயாவும் பார்க்கத்தகுந்தது.

குறிப்பு:— இதற்கு மேலெழுத இப்புத்தகம் இடந்தரவில்லே. மற்ற முழுவிவரங்களுக்கும் எனது காசியாத்திரை என்னும் புத்தகத்தில் தெரிந்து கொள்க.

## 108. ஸ்ரீ காசி

ப்ரபாவம்—பிந்து மாதவப் பெருமாள், மாதவிதேவி, ஆனந்தவல்லித்தாயார், தாரகவிமானம், மணிகர்ணிகை, சக்கரதீர்தம், பஞ்சநதி, ஞானவாவி, கங்கைமுதலியதீர்த்தங்கள், புஜங்கசயனம், கிழக்கேதிருமுக மண்டலம், சிவபிரானுக்குப்ரத்யக்ஷம்.

மார்க்கமும் வசதிகளும். O. R. Ry., & E. I. Ry., கூடுகிற (Mogalserai Jn) முகல்கிராய் ஜங்ஷன் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கே 6-மைலில் காசி க்ஷேத்திர மிருக்கின்றது. இந்த காசிக்கு. **Kashi** காசி (Banares Contonement) பெனரிஸ் என்று இரண்டு ஸ்டேஷன்களிருக்கின்றன. ராஜகாட்டிலிருக்கிற காசி ஸ்டேஷனில்தான் யாத்திரைக்காரர்கள் இறங்குகிறார்கள். இரண்டு ஸ்டேஷன்களிலும் இறங்கலாம். ஸ்டேஷனுக்கும் ஊருக்கும் 2-மைல் தூரமுள்ளது. வண்டிகளுண்டு. சத்திரங்களும் தர்மசாலைகளு மிருப்பினும் பண்டாக்களின் வீடுகளில் தாமசிப்பதே நன்று.

**KASHI STATION.** காசி ஸ்டேஷன். இது கங்கையின் வாராவதிக்கு 200-அடிதூரத்திலிருக்கின்றது. அழகிய கட்டடம். கங்கையைக்கடந்து காசி நகருக்கு வர 47,04771 ரூபாய் செலவில் ஒருஅழகிய பெரிய வாராவதி கட்டப்பட்டிருக்கிறது. இதற்கு Dufferin Bridge. டபரின் வாராவதி என்று பெயர். இந்தவாராவதியின் மத்தியில் ரெயில் போகும் படியான ரோட்டும், இருபக்கங்களிலும் ஜனங்களும் கால்நடைகளும் நிர்பயமாய் போய்வர ஒருரோட்டும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இந்த ஸ்டேஷனில் வந்திறங்கினதும் பண்டாக்களும் குமாஸ்தாக்களும் கூட்டங் கூட்டமாய் வந்து யாத்திரிகர்களை தத்தம் ஜாகைகளுக்கு அழைத்துக் கொண்டு போக மன்றாடு வார்கள். அவர்கள் இடவசதியளித்து புரோஹிதம் முதலிய வைதிக காரியங்களைச் செய்து வைப்பதாகச் சொல்லி தேனொழுகும் வார்த்தைகளால் போற்றுவர். அவர்கள் தமிழ் தெலுங்கு பேசுகிறார்கள் என்று ஏமாறவேண்டாம். பாஷைதெரியாத வூரில் நம்பாஷைகளில் பேசினால் சந்தோஷமே ஜனிக்கும். அவர்களில் அநேகர் நம்தேசத்து அயோக்கிய சோம்பேறிப்பார்ப்பார்கள் இங்கு வந்து பாபத்தைச் சம்பாதித்துக்கொள்ள வந்திருக்கின்றனர். அவர்கள் செய்யும் காரியங்கள் இகழத்தககனவாயிருக்கின்றன. பார்பனர்களுக்கு பணமே ப்ரதானம் போலும். அவர்களிடத்தில் வெகுஜாக்கிரதையாக விருக்கவேண்டும். அப்பட்டணத்து ஸ்தானீகர்களா யிருக்கப்பட்டவர்களையே அறிந்துச் செல்லவேண்டும். காசியில் பண்டாகளின் உதவிமிக்க அவசியகமே யாகிலும் ஏமாறக்கூடாது. பரிவோடும் உபசாரத்தோடும் பேசுவதைப்பார்த்து அவர்களிடத்தில் நம்பிக்கை வைக்கலாகாது. இங்கு மாத்திரமன்று, கயா பிரயாகை முதலிய விடங்களிலும் இப்படியேதான். நான் மிகைப்படக் கூறவில்லை. பொதுவாய் யாத்திரிகர்கள் மிகவும் எச்சரிக்கையாய் இருத்தல் வேண்டும். ஸ்தாலீபுலாக ந்யாயமாக ஒரு சம்பவம் கூறுகிறேன்.

1912ஸ்ரீ ஜூன்மாதத்தில் மலையாள தேசத்திலிருந்து 40-பேர் காசியாத்திரைப் புறப்பட்டு இவ்விடம் வந்தனர். வடக்கஞ்சேரி கிருஷ்ணய்யர் என்ற அயோக்கிய பார்பான், அந்த யாத்திரிகர்களை யணுகி தான் சாஸ்திரி என்றும், புரோஹிதர் என்றும் இங்கு வருபவர்களுக்கு வசதி

செய்து கொடுத்து வைதிககாரியங்களை எல்லாம் குறைவர செய்துவைப்பவர் என்று சொல்லி, மனம் போனபடி பணம் பறித்ததோடு விடாமல், அவர்களுக்கு பிரயாண டிக்கட்டும் தான் வாங்கித் தருவதாய் அவர்களை ஏமாற்றி, நபர் ஒன்றுக்கு ரூபாய் 22-வீதம் வாங்கிக்கொண்டு பொய் பாசுகள் தயாரித்து, அவர்களை ஸ்டேஷனுக்கு அழைத்துக் கொண்டு போய், ரெயில்வே அதிகாரிகளையும் ஏமாறச் செய்து அவர்களை வண்டியில் ஏற்றி அனுப்பிவிட்டான் B.N. Ry, **KHARGPUR** கரக்பூர் ஸ்டேஷனில் டிக்கட்டு பரிசோதித்தவர் பொய் பாசுகளைக் கண்டு பிடித்து மேற்படி யாத்திரிகர்களை இறங்கச்செய்து போலீசாரிடம் ஒப்புவித்தனர். போலீசார் அவர்களை அரஸ்டுசெய்து காசிக்குக் கொண்டுவந்து கேசு நடந்ததில் அந்த ஏழை கேரள வாசிகள் புத்திஹீனமாய் டாணிக்காரனை நம்பி மோசம்போனதாய் கண்டு, அவர்களை விட்டுவிட்டு, முழுக்குற்றத்திர்க்கும் பாத்தியப்பட்ட டாணிக்கார புரோகிதன் கிருஷ்ணய்யனுக்கு ஆறுமாதம் கடுங்காவலும், 50-ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டன. ஐயோ! என்னபாவம்! கேசு முடிகிறவரையில் அந்த யாத்திரிகர்கள் காசியிலேயே தாமஸித்ததோடு டிக்கட்டுகளுக்குக் கொடுத்த பணமும் இழந்து அவதிப் பட்டதை எழுதவியலுமோ! புண்ணிய க்ஷேத்திரத்தில் வந்து வசித்தும், உத்தமகுலத்தில் ஜனித்தும், புரோகிதர் என்று நடித்தும் இம்மாதிரி வஞ்சிப்பதென்றால் அவனுக்கு ஈசன் என்னகதி யளிப்பார்! நமது தேசஜனங்களே நம்மை வஞ்சித்து துன்பத்திற்குள்ளாக்குவதென்றால் நாம் இதை யாரிடம் முறையிடுவது! இந்த ஸம்பவத்தினால் நாம் எவ்வளவு சாக்கிரதையாகவும், கவனமாகவும் இருக்க வேண்டும் என்பதை உணர்வோமாக!!!

**சத்திரங்கள்:**—காசி ஸ்டேஷனுக்கு அருகாமையில் இரண்டொருவசதியான தர்மசாலேகளிருக்கின்றன. இவைகள் கோயிலுக்கும், ஸ்நானகட்டடங்களுக்கும் இரண்டு மைல் தூரமிருப்பதால் யாத்திரிகர்கள் இதில் தங்குவதற்கு பிரியப்படமாட்டார்கள். பட்டணத்திற்குள் மார்வாடிகள் சத்திரங்களிருக்கின்றன. அவைகள் அஸஹ்யமானவைகள். நாட்டுக்கோட்டையார் சத்திர மொன்று பெரியதாயும் அழகியதாயுமிருக்கின்றது. இதில் அந்தணர்களுக்கு அன்னமிடுவதும் தவிர, அந்தணர்களுக்கும், நாட்டுக் கொட்டை செட்டி மார்களுக்கும் மாத்திரம், வசதி செய்து கொடுக்கிறார்கள். இதர ஜாதியார்களுக்குக் கொடுப்பதில்லே. இது நம் பட்டணத்துக்கு. கொமுட்டிச்சாதியார் ஏற்ப்பாட்டைப் போலிருப்பதால் இகழத்தக்கதே. தர்மவான்களாகிய நாட்டுக் கோட்டை செட்டி மார்கள் இந்த க்ஷேத்திரத்தில் ஏனே பாபம் சம்பாதித்துக் கொள்ளவேண்டும். இதர வகுப்பாருக்கும் அந்தச் சத்திரத்தில் ஒரு பாகம் கொடுத்தால் விசுவநாதர் தண்டிப்பார்போலும். கோமுட்டி வைசிய ப்ரபுக்களாவது நாட்டுக் கோட்டை வைசிய பிரபுக்களாவது நம்தேசத்து சைவர்களுக்கு ஓர் சத்திரம் கட்டிவைத்தால் அவர்கள், இன்னும் தேசும் பொறையும் திறலும் புகழும் நல்லதிருந்திய ஞானமும் செல்வமும் திண்ணமாய் அடைவார்களென்று கங்கையில் நிராடி விசுவேசுவர் முன்னிலேயில் சத்தியம் செய்வேன். கேதாரகட்டத்தில் திருவாடுதுறை ஆதீனத்தைச்சார்ந்த கண்ணப்பசாமிமடம் திருப்பனந்தாள் மடத்தைச்சார்ந்த குமாரசாமிமடம் என இரண்டுமூன்று மடங்களிருக்கின்றன. இருந்தென்ன! அந்தந்த மடத்தின் சீடர்களுக்கே யன்றி மற்றவர்களுக்குக் கொடுக்கும் நோக்க

மில்லை. இவர்களுடைய மூர்க்கத்தன மென்னே! கங்கைக் கரை யோரமாய் விசாலமாகக் கட்டப்பட்ட சேதுபதியின் மடம் ஒன்றுளது. இதுவும் ஒரு மடத்தாண்டி மேல் விசாரணை என்கிற பிசாசுனிடம் அகப்பட்டு பிறருக்கு உபகார மில்லாமலிருகின்றது. டாணிக்காரர், கங்கா புத்திரர், பண்டாக்கள் வீடுகளைத் தவிர வேறு வசதிகள் கிடையா. பண்டாக்களின் வீடுகளில் தங்குவதே உசிதம். பண்டாக்களுக்கு, வைதிக காரியங்கள் செய்து வைப்பதற்கு கொடுக்கும் ஸம்பாவனை தவிர வீட்டுக் குடிக்கூலிக்காக ஒன்றும் கொடுக்கவேண்டியதில்லை. காசி ஸ்டேஷனுக்கு அருகாமையில் இராமானுஜ கூட மொன்று இருக்கின்றது.

## ஸ்ரீ காசி

ஸ்ரீமத் வேதஶாஸ்ரேதிஹாஸபுராணங்களில் ஸாக்ஷாத் மோக்ஷப்ரதான மென்று பெயருடையதாய், சிவராஜதானி யாய் ப்காசிக்கும் ஸ்ரீ காசீ க்ஷேத்திரம், தனுராகாரமாய் உத்தரவாஹினியாய் ப்ரவஹிக்கும் கங்கைமாநதியின் கரை மீது பஞ்சக்ரோசாத்மகமாய் அசீஸங்ககட்டம் முதல் வருண ஸங்ககட்டம் வரையில் 64. கட்டங்களுடையதாய் அனேக விமானங்களுடன் பிரகாஶித்து கொண்டிருக்கின்றது.

இது வாரணசி, அவிமுக்தக்ஷேத்திரம், ஆனந்த விமானம், ருத்ரவாசம், மஹாஸ்மாஶாநம், திரிகண்டக விராஜிதம், கௌரீமுகம் என்று பலபெயர்களை யுடையது. இவ்வுலகிலுள்ள ஸகலதீர்த்தங்களிலும் இவ்விடத்திலுள்ள கங்கை, ஞானவாவி, மணிகர்ணிகை அதிக ஶ்ரேஷ்ட மானவைகள். இவைகளே யல்லாமல் சக்கரதீர்த்தம், விமலோதக தீர்த்தம், பிந்து தீர்த்தம் முதலிய அனேக தீர்த்தங்களு மிருக்கின்றன.

இந்த க்ஷேத்திரத்துள் விளங்கும் மூர்த்தி தீர்த்தங்களில் முக்கியமானவை பத்து:—

விஸ்வேஸம் மாதவம் துண்டிம்
தண்டபாணிஞ்ச பைரவம்
வந்தே காசிம் குஹாம் கங்காம்
பவாநீம் மணிகர்ணிகாம். என்கிறபடி.

1. விசுவேஸ்வரர் 6. காசிதேவி
2. பிந்துமாதவர் 7. குகை
3. துண்டிவிநயகர் 8. கங்கை
4. தண்டபாணி 9. பவானி
5. பைரவமூர்த்தி 10. மணி கர்ணிகை

விஸ்வநாதர் ஆலயம். இது கீழ்மேல் ஒடிய ஒரு சந்தியிருக்கின்றது. கோயிலின் முகவாசல் தெற்குமுகமுள்ளது. விஸ்வேஸ்வர லிங்கமூர்த்தி மேற்கே திருமுக மண்டலம். ஆலயம் வெகுசிறியதாக விருந்தபோதிலும் விசித்திர சிற்பாலங்காரத்துடன் அமைக்கப்பட்டிருக்கின்றது. ஆலயத்தின் மூலஸ்தானம் பத்தடி சதுரமுள்ளது. லிங்கமூர்த்தியை ப்ரதக்ஷணம்வரலாம். மூலஸ்தானத்திற்கு நாற்புறமும் வாசல்களுண்டு. மூலஸ்தானத்தை யடுத்து ஒரு பிராகாரமுள்ளது. பிராகாரத்தில் சிலமூர்த்திகளும் பலலிங்கங்களும் ப்ரதிஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. ஆலயத்தின் தரையாவும் சலவை கற்களால் பரப்பப்பட்டு அந்தக்கற்களில் ஒவ்வொன்றிலும் அவ்வைந்து ஆங்கில ரூபாய்கள் பதிப்பிக்கப்பட்டு அழகாய் ப்ரகாசித்துக்கொண்டிருக்கின்றன. அவைகளின் மேல் கால்வைத்து நடக்கவும் கூசும். உட்சுவர்கள்யாவும் சலவைக் கற்களாலேயே பதிக்கப்பட்டிருக்கின்றன. கற்களினல் அமைந்த விமானம் தங்கத்தகடு மூடப்பட்டு

ஜ்வலித்துக் கொண்டிருக்கின்றது. இந்த விமானம் தென் தேசத்துத் தேவாலய கோபுரங்கள் போல் இராமல் வாழைப்பூ உருவமைந்ததாயிருக்கின்றது. இம்மூலஸ்தானத்தின் மத்தியில் 2½-அடி சதுரமுள்ள வெள்ளித் தகட்டால் பொதித்த தொட்டியினுள் வெள்ளிதங்கத்தால் செய்வித்த ஆவிடையாரோடு கூடிய 1¼-அடி உயரமுள்ள ஸ்ரீ விஸ்வேஸ்வர மூர்த்தியாகிய ஜோதிலிங்கம் சாளகிராமசிலையாகையால் மாசிலா நீலங்கலந்த கருமைநிறத்தோடு ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது.

[இந்த லிங்கமூர்த்தி விஷ்ணுஸ்வரூபமுள்ள சாளக்கிராமசிலை எனப்படுகிறது. ஸ்ரீ முஷ்ணத்திலுள்ள ஸ்ரீ பூவராஹஸ்வாமியும் ஸ்ரீ கூர்மத்திலுள்ள ஸ்ரீ கூர்மநாதஸ்வாமியும் இதேமாதிரியான சாளிகிராமசிலை எனச் சொல்லப்படுகிறது. சாளிகிராமசிலைகளெல்லாம் விஷ்ணு மூர்த்தங்களையுடையனவை என்பது லோகபிரஸித்தம்.]

தென்னாட்டு நிர்பந்தங்கள் இங்கு கிடையா. பரம ஏழையும் தனிகனும் ஸர்வ ஸ்வதந்திர முடையவர்களாய் தாமே பனம்போல திருப்தியாய் தம் கையால் கங்கையின் தீர்த்தத்தை விட்டு அபிஷேகஞ் செய்து பிறகு பத்திர புஷ்பாதிகளால் பூஜித்து தமது சிரசை லிங்கத்தின் மீது மோதுவித்துக்கொண்டு திருமஞ்சன தீர்த்தத்தை கண்களில் ஒத்திக்கொண்டும் ப்ரோக்ஷித்துக்கொண்டும் போகலாம்.

[விஷ்ணுமூர்த்தியின் திருமஞ்சனதீர்தம் பாவனமென்றும் ஸ்வீகரிக்கத்தக்கதென்றும், சிவாபிஷேக ஜலம் ஸ்வீகரிக்கத்தக்கதல்லவென்பதும் வைதிமதஸ்தர்களின் கொள்கை. சிவநிர்மால்யாங்களை வைதிகர் கொள்ளார் என்பதை இங்கு ப்ரத்யக்ஷமாகக் காணலாம்.]

ஸ்ரீ காசியிலுள்ள கங்கை சிவநிர்மால்யம், பஸ்பம். மிருத்திகை வில்வம்முதலியன இதரப்ர தேசங்களுக்குக் கொண்டுபோகக் கூடாதென்பது ஸ்காந்தபுராணத்தின் கூற்று.

அர்ச்சனை முதலியவை செய்யவேண்டுமானால் அவ்வாலய உரிமைக்கார பண்டாவின் மூலமாகத்தான் செய்யவேண்டும்.

இந்த ஆலயம் மூன்று தரம்துருக்கர்களால் அழிக்கப்பட்டது. இப்போதுள்ள ஆலயம் Indore இந்தூர் அகல்யாபாய் மகாராணி அவர்களால் கட்டிவைக்கப்பட்டது. காசிகாண்டத்தில் கூறப்பட்டிருக்கிற 1. முத்திமண்டபம், 2. சிங்காரமண்டபம், 3. ஐஸ்வர்யமண்டபம், 4. ஞானமண்டபம் 5. போகமண்டபம் என்று ஐந்தில் இக்காலத்திலுள்ளது முத்திமண்டபம் ஒன்றுமே. மற்றவை மறைந்துக் கிடக்கின்றனவாம்.

இப் புத்தகம் இடம் தராமையால் மற்ற ஆலயங்களின் விளக்கத்தை நமது ஸ்ரீ காசி க்ஷேத்திர விமர்சம் என்னும் புத்தகத்தில் கண்டு கொள்க.

## மூன்றுநாளில் காசி தரிசனம்

காசியில் ஐந்துநாள் இருந்தால் போதும், அதிகநாளிருந்தால் செலவு அதிகமாகுமேதவிர வேறொரு பிரயோஜனமுமில்லை. சுகாதாரமற்றஸ்தலமாகையால் நோய்வாய்பட்டு கஷ்டப்படவேண்டும். சிறிது கஷ்டப்பட்டால் மூன்று நாளில் இங்குள்ள எல்லா மூர்த்தி தீர்தங்களையும் தரிசித்து விடலாகும். ஒரேநாளில் நகரவிநோதங்களையும் அழகிய கட்டடங்கள், கடைத்தெரு கண்காட்சிசாலைகளையும் கண்டுகளித்து விடலாகும்.

## முதல் நாள்.

காலை-6-மணிக்கு சோம்பலில்லாமல் பண்டாவுடனுவ்து புரோகிதனுடனுவது ஜாகையை விட்டுப்புறப்பட்டுப் போய், 1. மணிகர்ணிகா கட்டத்தில் ஸங்கல்பத்துடன் ஸ்நாநம் செய்து, 2. விஸ்வநாதரை மனமிடங் கொண்டவாறு தாங்களே கங்கை நீரால் அபிஷேகஞ் செய்து பூஜித்து பிரதக்ஷண நமஸ்காரதிகள் செய்து கொண்டு, 3. ஞானவாவியில் தீரத்தமெடுத்து ஸ்வீகரித்து, 4. அன்னபூரணியை அடிபணிந்து 5. விசாலாட்சியை தரிசித்து 6. துண்டிவிநாயகரைத் தொழுது, 7. சாட்சி விநாயகர் 8. காலபைரவர், 9. பிந்து மாதவர் முதலிய கோயில்களுக்குச் சென்று சேவித்துக் கொண்டு, வரும் வழியில் சமையிலுக்கும் சாப்பாட்டுக்கும் வேண்டிய பதார்த்தங்களை வாங்கிக் கொண்டு, 10-மணிக்குள்ளாக தங்கள் ஜாகைக்கு வரலாகும்

பகல்-ஒருமணிக்குள் போஜநம் முடித்துக் கொண்டு இரண்டு மணிக்குமேல் ஆதவன் கொடுமைக்கு அஞ்சாமல் புறப்பட்டு, 10. ஆதிவிசுவேசுரர், 11. துர்க்கைஅம்மன் 12. கௌடியம்மன், 13. கேதாரேஸ்வரர், 14. ஹனுமார் சந்நிதி முதலியவைகளை தரிசனம்செய்து கொண்டு மாலை 7-மணிக்குள்ளாக வந்துவிடவும்.

## இரண்டாம்நாள்

காலை-முன்னாள் போலவே பண்டாவின். குமஸ்தாவை அழைத்துக்கொண்டு 15-தாசாசுவமேத கட்டத்திற்குச் சென்று ஸங்கல்பத்துடன் ஸ்நாநமாசரித்து செவ்வனே நீறணிந்து ஒரு (Boat) படகை அமர்த்திக்கொண்டு தெற்கிலிருக்கும் 16-அசிஸங்ககட்டம் வரையில் போகவேண்டும்.

[அங்கு ஸங்கல்பத்துடன் ஸ்நாநம் செய்து பூஜை செய்யும் படி நிர்ப்பந்திப்பார்கள் பேய் பண்டாக்கள். ஒவ்வொரு கட்டத்திலும் அம்மா திரியே செய்ய தொந்தரவு செய்வார்கள். அவர்கள் வார்த்தைகளுக்கு இடம் கொடுக்காமல் அவர்களிரண்டொருவர்களுக்கு காலணா கொடுத்து விட்டு, அந்தந்த கட்டங்களில் கங்கா தீர்த்தம் சிறிது கையில் கொண்டு, சிவ சிவ ஹரி ஹரி என்று சிரஸில்புரோக்ஷித்துக் கொண்டு ஆசமனம் செய்து பரமனை தியானித்து வருவதே உசிதம். இப்படிக் கில்லாமல் முரட்டுத்தனமாயும் மூடபக்தியாலும் பொந்தியோடு கைலாயம் போய்விடலாமென்று எல்லா கட்டங்களிலும் ஸங்கல்பம் செய்து ஸ்நானஞ் செய்யவேண்டு மென்று மூர்க்கத்தனமாய் ஒழுகினால் காலஹரணமாவதுடன் துட்டுச் செலவுமதிகரித்து நீர்த் தடுப்பினாலும் சூர்யோஷ்ணத்தாலும், அகால போஜனத்தாலும் நோய்வாய்பட்டு மற்ற க்ஷேத்திரங்களின் சேவையையுமிழந்து எமதரிசனம் செய்ய வேண்டியது தான்.]

இங்கிருந்து மறுபடியும் வடக்குநோக்கி 17. சிவாலா கட்டம் 18. அநுமார்கட்டம் 19. ஹரிச்சந்திரகட்டம் 20. கேதாரகட்டம் 21. தசாசுவமேதகட்டம் 22. மணி கர்ணிகாகட்டம், 23. பஞ்சகங்காகட்டம், 24. வருணசங்கம கட்டம் வரையில் சென்று அஸிஸங்கமகட்டத்தில் செப்பியவண்ணம் ஆங்காங்கு தீர்த்தமெடுத்து பரோக்ஷித்துக் கொண்டு ஆங்காங்குள்ள விசேஷங்களை பொருமையுடன் தரிசித்துக்கொண்டு, வேண்டுமானால் புநः மணிகர்ணிகாகட்டத்திலிறங்கி விசுவநாதரையும் தரிசித்துக்கொண்டு 10-மணிக்குள் வீடுவந்து சேரலாம்,

பகல்; 3-மணிக்குமேல் சென்று விவிதவர்ணங்களாலும் கண்களைகவரும்படியாய் அழகாய்செய்துள்ள மரப்பொம்மைகள், பட்டுப்புடவைகள், சரிகைப்புடவைகள், உயர்மதிப்புள்ள சரிகைதுப்பட்டாக்கள், செப்பு வெங்கலப் பாத்திரங்கள், ருத்திராக்ஷம், சங்கு, லிங்கங்கள், முதலியன விற்கும் சௌக்கு என்னும் ஹரிசந்திர பஜாரைப்பார்த்துவிட்டு, 7-மணிக்குள் வீடுவந்து சீக்கிரத்தில் சமையல் அல்லது பலகாரம்செய்து சாப்பிட்டு 8-மணிக்குமேல் விசுவநாதர் ஆலயம் செல்லவேண்டும்.

இரவு 9.மணிக்கு விசுவேசுவரருக்கு நமது நாட்டுக் கோட்டை செட்டிமார்களால் தினம் தோறும் நடத்திவைக்கப்படும் அபிஷேக தூபதீப புஷ்பாலங்கார நைவேத்யங்களைக் காண கண்களாயிரம் வேண்டும். இத்த கட்டளைக்கு வேண்டிய விலையுயர்ந்த சாமான்களையும் அபிஷேக வஸ்துக்களையும் புஷ்பமாலிகா ஜாலங்களையும் அவர்களே கொண்டு வந்து செய்துவிட்டு அர்த்தஜாமம் கழிந்தவாறே அவைகளனைத்தையும் தங்கள் சத்திரத்திலுள்ள உத்தியோகசாலைக்குக் கொண்டு போய் விடுகிறார்கள். இந்த அபிஷேககாலத்தில் தான் நமது தேசத்து தஞ்சாவூர் மேளவாத்தியம் வாசிக்கப்படுகின்றது. தேவாரம் ஓதப்படுவது மிச்சமயமே. வீணையின் நரம் பொலியும், மிருதங்கவோசையும் இனிமையாய் கேழ்க்கப்படுவது மிச்சமயமே. கண்டாமணியின் ஓசை விண்ணுக்கேகும். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், இந்துஸ்தானி, குஜராதி கீர்த்தனங்களை ஏககாலத்தில் கேட்டுக்களிப்பதும் இச்சமயமே. நமது தென்னாட்டு ஜனங்களை இந்த காலத்தில்தான் ஒருங்கே காணலாகும். அடியார்கள் ஆனந்தத்தால் ஹரஹர சிவசிவ சாம்ப சாம்ப-விஸ்வேசா! என்று அறையும் சப்தமானது மேளவாத்திய முதலிய ஓசையையும் கொண்டுபோய் கங்கையில் கரைத்துவிடும், ஹா! ஹா! என்ன ஆனந்தம்.

## மூன்றாம் நாள்.

காலை—: கேதாரகட்டத்தில் ஸ்நானஞ் செய்து வைதிக விஷயமான தீர்த்த ஸ்ராத்தம் கங்காபூஜை முதலியன செய்து கொள்ள வேண்டியது. ஏழைகளுக்கு அன்னமளிக்கலாம். மடங்களில் பிராமணர்களுக்கு சமாராதனை செய்து வைக்கலாம்.

பகல்:— 3-மணிக்குப் புறப்பட்டு தங்கள் வசதிக்கு அருகாமையிலுள்ள ஓர் கட்டத்துக்குச் சென்று ஒரு Boat போட்டை அமர்த்திக் கொண்டு கங்கைக்கு கிழ்கரையிலுள்ள ராம்நகர் என்னும் வியாச காசிக்குச் செல்ல வேண்டும். கீழ்கரையில் வியாஸபராசரர் லிங்களிருக்கின்றன. கோட்டையும், அரசன் அரண்மனையும், காட்சிப் பொருள்சாலை, பெரியகுளம், துர்க்காகோயில், சிங்காரத் தோட்டம், காக்ஷிக்குறியன. இத்தோடு காசி க்ஷேத்திர பிரதக்ஷணம் முற்றுப் பெற்றது.

## ஸ்ரீ காசி க்ஷேத்திர விமரிசம்.

அயோத்தியை, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை, என்னும் முத்திநகர் ஏழில் இது ஒன்று. முத்திநகர்களெல்லாம் முகுந்தனது க்ஷேத்திரங்களே. இந்த காசி நகரம் பூர்வத்தில் விஷ்ணு க்ஷேத்திரமாயிருந்தது என்றும், பிறகு அது கேசவப் பிரானால் சிவபிரானுக்குக் கொடுக்கப் பட்டதென்றும் முனிவர்கள் கொள்கை. கங்கையின் வடகரையிலுள்ள இந்த காசி க்ஷேத்திரம் பார்வதியோடு வசிப்பதற்கு பரமசிவனால் படைக்கப் பட்டதென்று காசி காண்டம் கூறும். இருவினையுந் தொலைந்து உயிர்கள் வீடுபெறவெண்ணி இவ்வாரணாசி முகுந்தனாலே ஆதியில் கற்பிக்கப்பட்டு பிறகு கபாலிக்குக் கொடுத்தருளப் பெற்றதென்று நாரதீய புராணம் முப்பத்து நான்காவது அத்தியாயம் கூறும்.

அது சுருக்கமாக இங்கு மொழி பெயர்க்கப்பட்டது. உருக்கு மாங்கதன் சரித்திரத்தில் தனது பத்தினி சந்தியாவளி தனது பதியை வருத்தும் மோகினிக்கு, கணவனுள்ளம் கலங்கச் செய்யும் பெண்டிர் எப்போதும் துன்புறுவாள், நீ நங் கொழுனனை மனம் வருந்தச் செய்யாதே என்று, பலகதைகளைச்சொல்லி வருமிடத்து தான் வாழ்கைக்கு உடன்படு முன்னம், கன்னிகையாக பிறந்தகத்திலிருந்தபோது ஒரு காஷ்டத்திலிருந்து சுண்டுவிரள் பிரமாணத்தில் வெண்ணெய்போன்ற, ஒரு புழு வெளிப்பட்டு உடனே "காஷ்டேளா" என்ற பெயரோடு, ஒருபெண்ணுகி எனக்குச் சொல்லியகதையை உனக்குக் சொல்லுகிறேன் என்று சொல்லுகின்றுள்.

உயிரைத் தேடிவரும் நமனைப்போல் ஓடிவருகின்ற அரக்கனுக்கு, அஞ்சிய அரக்கி வாணிகம் செய்துகொண்டு ஆங்கு வந்த பிராமணன் ஒருவனைப் பார்த்து இம்மரத்தில் தொங்குகின்ற சத்தியை எடுத்து பரமதுஷ்டனுன் அந்த அரக்கன் மேலே விடு என்றுள். அப்பிராமணனும் அவளுரைத்தவாறு செய்தான். அச்சூலம் அவனைக் கொன்று இந்திரனிடம் சென்றது. உடனே அரக்கி அப்பிராமணனைத் தன்னேடு கூடி தேவ மனுஷபோகங்களைத் துய்க என்று ஒரு குகைக்கு அழைத்துக்கொண்டு போய், ஆங்கு மஞ்சத்தில் படுத்திருந்த காசிராஜன் புதல்வியாகிய ரத்தினவளியை அந்த பிராமணனுக்குக் காண்பித்தாள். இவள் எந்த க்ஷேத்திரதினுடைய எல்லையைக் கடந்து மஹா பாதகங்கள் உள்ளே செல்லப் பெறுவதில்லையோ எந்த க்ஷேத்திரத்தில் இறந்தவர் பிறப்பதில்லையோ, அந்த க்ஷேத்திரமாகிய ஸ்ரீ காசியிலிருந்து விவாகத்தின் பொருட்டு சற்றுமுன்னே நீ கொன்ற எனது பர்த்தாவாலே கொண்டு வரப்பட்டவள். இவளும் இவன் கைவலத்துள்ள அரதனங்களும் நானும் உமக்கு உடன் பட்டோம், உமது பேரழகாலே உம்மைக் காதலித்து கௌமாரா வஸ்தையில் மணம் புரிந்தகணவனை கொல்வித்தேன். எங்களை கைவிடாமல் நீர் பரிக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டாள்.

அப்போது அந்தபிராமணன் அச்சமுற்று அவ்வரக்கியைப்பார்த்து மங்கையரை நேசிக்கலாகாதென்று நீதி நூல் கூறுகின்றது. என்னைக் காதலித்து உன்னை மணந்த மணாளனைக் கொல்வித்தாய், என்னிலும் அழகு மிகுந்த ஒருவனைக் காணில் என்னைக் கொன்று தின்பாய். விதி வசத்தால் உன்னிடம் அகப்பட்டுக் கொண்டேன் என்று சொன்னான். அரக்கி, ஏ அந்தணரே! என் கணவன் என்னை இகழ்ந்து இந்த ரத்தினவளியை கொண்டு வந்தானாகையால் அவனைக் கொல்வித்தேன். நீர் என்னை நம்பியிருந்தால் உம்மைக்கொல்ல மாட்டேன். நம்பினவரை மாய்த்தால் ப்ரம்மஹத்தி தோஷம் உண்டாகும் என்பர். நீர் சிறிதும் அஞ்சவேண்டாம் என்று உறுதி கூறி, அவ்வரக்கி தான் ஒருபெண் யானையாகி தன் பர்த்தாவையும், ரத்தினவளியையும், மற்ற சாமக்கிரிகைகளையும் ' தன் முதுகில் சுமந்து கொண்டு மூன்று முகூர்த்த காலத்தில் காசி க்ஷேத்திரத்துக்கு வந்தாள். ஏ வேதியரே, இக்காசிமாநகரம் பாபவிருக்ஷத்தை சேதிக்கவமைந்த கோடரியாகும். தீவினையால் தீங்குறும் உயிர்களுக்கு நற்கதியைக் கொடாநின்ற இந்த க்ஷேத்திரம் இக்காலத்தில் சிவஸ்தலமா யிருக்கின்றது. அவைஷ்ணவ க்ஷேத்திரத்தில் முத்திகிடைக்காது என்பர் ஆரியர். ஆதலால் இது ஆதியில் விஷ்ணுஸ்தலமென்று புராணங்களாலே சொல்லப்படுகின்றது. திரிபுராந்தகனாகிய சிவபிரான் பிரம்மஹத்தியினால் பீடிக்கப்பட்டு இந்த வைஷ்ணவ க்ஷேத்திரத்தில் பிரவேசித்ததும் பிரமஹத்தி இதனுள் புகாது விரூபாக்ஷனை விட்டு எல்லைக்கப்புறம் நின்றது. உடனே சங்கரன் அக்காலத்தில் இங்கு எழுந்தருளியிருந்த கேசவபிரானைத் திருவடி தொழுது 'ஸ்வாமி உம்முடைய க்ஷேத்திரத்துள் நான்வர ப்ரம்ம

ஹத்தி என்னை விட்டு ஆங்கு நிற்கின்றது. இந்த க்ஷேத்திர த்தைக் கடந்து போவேனேயாகில் தவிராது என்னை அது பிடித்துக்கொள்ளும், சந்தேகமில்லை. தேவரீர் எனக்கு இந்த க்ஷேத்திரத்தை தானம் செய்தருளவேண்டும், இங்கு நான் வசிப்பேனேயாகில் ப்ரம்மஹத்தியால் பீடிக்கப்படா திருப்பேன், ஜனங்களாலும் நன்கு பூஜிக்கப்படுவேன், கருடத்துவஜரான நீர் எனக்கு ப்ரசன்னராகவேண்டும்," என்று பிரார்த்தித்தார். திருமகள் காந்தன் எதிர்த் தோன்றி இக்காசியை சிவபிரானுக்கு கொடுத்தருளினர். அந்தணரே! அது முதல் இது சைவக்ஷேத்திரமாயிற்று. இது வைஷ்ணவ க்ஷேத்திர மென்று புராணங்களன்றி பெரி யோர்களும் மொழிவார்கள். இந்த க்ஷேத்திரத்தில் ஸ்நான, தான தவ யோக, மௌனங்களை வருந்திச் செய்த லிலும் உயிர் மாயப்பெறின் அவற்றால் வரும் பயனிலும் அதிகம் வரும். முத்தி பெருவான் யாவனே அவனே இந்த க்ஷேத்திரத்தில் மாய்வான். மகாபாதகம் செய்தவனாயினும் இந்த க்ஷேத்திரத்தில் இறப்பின் மோக்ஷமடைவான். இக்காசிக்கு பாபபரிகாரம் செய்கின்றவாரணசி என்றும், பாபங்களெல்லாம் முற்றும் விமோசன மாகின்ற மையால் அவிமுக்த க்ஷேத்திர மென்றும் பெயர். கருமங்களை நாசஞ்செய்து முக்தி அளிப்பதற்காகவே அச்சுதப்பிரானாலே இந்த க்ஷேத்திரம் ஆதியில் கற்பிக்கப் பட்டது என்றாள்."

அகஸ்தியர் விந்தத்தை யடைந்த அத்தியாயத்தில்.

> மூவரிருப்பிடமாய் முகிலூர்திமுதற்றேவர்
> மேவருதற்கரிதாயருண் முத்தியின்வீடாய்ப்
> பாவமகற்றுறுகாசியின் வாழ்வுபடைத்தோர்கள்
> யாவரவர்க்கரிதாய விழுப் பொருள்யாதேயோ.

ஸ்ரீ காசி திரிமூர்த்திகளுக்கும் ஸ்தான மென்றும் முத்திநகர் ஏழினுள் காசியில் வாழ்வுற்ருேர் யாதருர்? என்றும் முத்திக்கிருப்பிட மென்பதும் இப்பாட்டால் யாவருக்கும் ஒப்பமுடிந்தது. இதனை காசிகாண்டம் நாரதீயம் முதலிய புராணங்களன்றி இராமோப நிஷதமும் கூறும்.

இத்தலையெய்தியிறக்குநர் யாருமிளைப்பாற
வுத்தரியங்கொடுமாதுமை வீசிடவுமையோர்பால்
வைத்தவரும்பொருள் மேவரு தாரகமறையோதி
முத்தியளித்திடுமிப்பதி யார்விடமுயல்வாரே.

ஸ்ரீ காசியில் உயிர்துறப்போர் இளைப்பாற உமாதேவி உத்தரியத்தால் வீசிட சிவபெருமான் தாரக மந்திரமோதி முத்தி யளிக்கின்றனன் என்று அகஸ்தியர் விந்தத்தை அடைந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

## தாரக மந்திரம்

ஒளியதானகாசிமீதுவந்து தங்குவோர்க்கெலாம்
வெளியதான சோதிமேனி விசுவநாத ளுனவன்
தெளியுமங்கை யுடனிருந்து செப்புகின்ற தாரகம்
வெளியதோரிராம ராமநாம மிந்தநாமமே

என்று சிவவாக்கியரும், காசியில் மறிப்போரது செவியில் அண்ணல் சிவபிரானுலோதப்படுவது தாரக மாகிய ராமநாமமென அகஸ்திய ராமஹர சங்கீதை கூறு மாறு கூறி, தாரக மந்திரம் இராமநாம மந்திர மென்றே விளங்க உறுதி கூறினர்.

புஸ்தக விஸ்தர பயத்தினல் இங்கு சுருங்கச் சோன்னேம்

"ஸ்ரீ காசி க்ஷேத்திர விமர்சம்"

என்னும் புஸ்தகத்தில் விஸ்தரேண எழுதப்பட்டிருப் பதால் அதில் கண்டு கொள்க,

# காசிக்குச் செல்லும் மார்க்கம்.

MADRAS. சேன்னபட்டணம். இது சென்னை இராஜதானிக்கு பிரதான பட்டணமாயும் இந்தியாவிலுள்ள பெரியபட்டணங்களில் மூன்ருவதாயும் விளங்குகிறது. இது கடலோரமாய் 30 சதுரமைல் பரப்புள்ளதாய், 5,30,000 ஜநத்தொகையுடையதாயு மிருக்கின்றது. பற்பல பாஷைகளைப்பேசும் பல ஜாதியாரையும் இப்பட்டணத்தில் காணலாம். வழங்கும் பாஷை தமிழ் தெலுக்கு இந்துஸ்தானியேயாகிலும் தமிழ்பாஷையே முக்கிய மானது.

1639-ஷுத்தில் ஆங்கிலேய ஈஸ்டு இந்தியா கம்பெனியார் ஒரு வர்த்தகாலயம் கட்டுவதற்காக பிரான்ஸிஸ் டே என்பவர் சந்திரகிரி அரசராகிய ஸ்ரீரங்கராயர் அவர்களைக் கேட்டார். இராஜா உத்தரவின்பேரில் அவர் ஏஜெண்டாகிய தர்மால வேங்கடாத்ரிநாயுடு கடலோரமாய் சிறிது இடம் அளந்து கொடுத்து தனது தகப்பனார் பெயராகிய சென்னப்பனுயுடு பட்டண மென்று வழங்கி வரும்படி கொடுத்தார். அதனால் இதற்கு சென்னபட்டண மென்று பெயரிடப்பட்டது. ஜ்யராஜ் டவுனில் கட்டப்பட்டிருக்கிற ஆர் மீனியன்சேயின்ட் மேரி கோயிலுக்கு "மேட்ரிடையஸ்" என்று பெயர் வழங்கிவந்தமையால் அது காரணமாக மதராஸ் என்ற பெயர் பெற்றதாகவும், ஆங்கிலேயருக்கு முன்னமே வந்திருந்த போர்த்து கேசியர், மயிலாப்பூரில் கடற்கரை யோரமாய் ஒரு மாதாகோயில் கட்டிவைத்து அங்கு அவர்கள் குடி ஏறி இருந்து "மாதரஸ" பட்டணம் என்று வழங்கி வந்த காரணத்தினல் பிறகு மதராஸ் பட்டணம் என்ற பெயர் பெற்றதாகவும் சொல்லப்படுகிறது,, கம்பீரமான கட்டடங்களுக்கும் அழகிய கட்டடங்

களுக்கும் இந்த சென்னபட்டணம் கல்கத்தா, பும்பாய், லட்சுமணபுரி முதலிய பட்டணங்களுக்கு, பின்வாங்கியதே. இச் சென்னை யிலுள்ள கட்டடங்களில், ஜெனரல் போஸ்டாபீஸ், பெரிய ரெயில்வே ஆபீஸ், ஹைகோர்ட்டு, கிருஸ்துவ வாலிபவ சங்கம், முனிசிபல் ஆபீஸ், கலஸ மஹால், முதலிய கட்டடங்கள் கொஞ்சம் சிறந்தவைகள். இந்தக் கட்டடங்களில் ஒன்ருவது கல்கத்தாவிலுள்ள "எஸ்பிலனேட் மான்ஷன்" என்ற கட்டடத்திற்கு நிகராது. ஏன்? இந்தபட்டணத்தில் ஏழைகளும், பிச்சைக்காரர்களும் அதிகம். வர்த்தகம் மிகக்குறைவு. தனவந்தர்களும் நடுத்தர ஜீவிகளில் பலரும் பி. ஏ. எம். ஏ. வரையில் உயர்தர கல்வி கற்று அன்னியர்களுக்கு அடிமைப்பட்டு ஜீவிப்பதையே பரம பிரயோசநமாக்கொண்டவர்களாயிருக்கின்ருர்கள். கலாசாலைப் படிப்பு பயன்படா தென்பதையும், மளிகைக் கடைக்காரன் கோடீஸ்வரன் ஆனதையும் சென்னை வாசிகள் அறியவேண்டும். தேசாபிமானமும் பாஷாபிமானமும் மதாபிமானமும் சிறிதும் கிடையாது. ஒருவரையொருவர் மதிப்பதில்லை. ரிக்ஷாவண்டி இழுக்கும் குரவனும், ஜட்காவண்டி யோட்டும் துலுக்கனும், கோச்சுவண்டி யோடடும் பறையனும், ரோட்டில் செல்லும் ஜனங்கள் விலகிபோவதற்கு ஹேய்! ஹேய்! டேய்! என்று விளிப்பார்கள். இந்த இழிவான சொற்கள் இந்த பட்டணத்தில் தவிர வேறெங்கும் கேட்பதரிது. பரஸ்பராபிமானமும், கூட்டுறவும் ஒத்துமையும் உண்மையும் இல்லாவிடில் இப்பட்டணத்தில் வர்த்தகச் சிறப்பு எவ்வாறு ண்டாகும்? இந்தியாவிலுள்ள எல்லா பட்டணங்களையும் கண்டு களித்து வந்த எனக்கு எனது ஜன்ம பூமியாகிய இந்தப் பட்டணத்தைப் பார்க்கும் போது பொருமையும் துக்கமும் அடையாம

யிருக்க முடியுமோ? சேத்பட்டு, நுங்கம்பாக்கம், தேனும் பேட்டை, மயிலாப்பூர், முதலிய விடங்களில் ஐரோப்பியர் கள், தனவந்தர்கள் வீடுகளெல்லாம் சிறிய தோட்டத்துடன் கூடிய பங்களாக்களாக விருப்பதால் இந்தப் பட்டணத்தை வெள்ளையர் The City of Magnificent distances. என்று சொல்லுகிறார்கள். இதுவும் நமது ஏழைபட்டணத்துக்கு ஓர் சிறப்பெயராகும்.

**சத்திரங்கள்**— ஸென்டரல் ஸ்டேஷனுக்கெதிரில் ராஜா ராமசாமி முதலியார் சத்திரம் ஒன்றிருக்கிறது. இது யாத்திரிகர்களுக்கு பலவிதத்திலும் சௌகரிய முள்ளது. எழும்பூர் ஸ்டேஷனுக்கருகில் கண்ணன் செட்டியார் சத்திரம் ஒன்றிருக்கிறது. இன்னும் சில சத்திரங்களிருபினும் அவை யாத்திரிகர்களுக்கு சௌகரியப் படாது. இப்பட்டணத்தில் யாத்திரிகர்களுக்கு போதுமான சத்திரங்கள் கிடையா.

**வண்டி வசதிகள்**—. டிராம்வண்டிகள் நகரத்திற்குள் நாலாபக்கங்களிலும் ஓடுகின்றன. சுமார் 400 மோட்டார் பஸ்கள் பலபக்கங்களிலும் ஓடுகின்றன. மாட்டு வண்டி, ஜட்கா வண்டி, ரிக்ஷா வண்டிகளுக்குக் குறை இல்லை. வெளியூர்களிலிருந்து 45 பஸ்ஸுகள் வந்து போகின்றன.

## பார்க்கவேண்டிய இடங்கள்

**கோயில்கள்**-- திருவல்லிக்கேணியில் ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமாள் சன்னிதி, மயிலாப்பூரில் ஆதிகேசவப் பெருமாள் சன்னிதி, அதைச்சார்ந்த ஸ்ரீ பேயாழ்வார் திருவ

வதரித்த திருக்கிணறும், சென்னை ஜியார்ஜ் டவுனில் சென்னகேசவப்பெருமாள்சன்னிதி, ஸ்ரீநிவாசன்சன்னிதி, அரங்கநாதன் சன்னிதி, வரதராஜப்பெருமாள் சன்னிதி, உடையவர் சன்னிதி, முதலிய விஷ்ணுவாலயங்களிருக்கின்றன. இவை யாவற்றிலும் தேசாந்திரி பிராம்ணர்களுக்கு மாத்திரம் சோறுகிடைக்கும். இது கோமுடிட்வைசியர்களுடைய ஏற்பாடு. மற்றவர்களுக்குக் கொடுப்பின் பாபம்போலும். மயிலாப்பூரில் பாடல்பெற்ற கபாலீச்சுரம் என்கிற பெரிய சிவஸ்தலமும், திருவள்ளுவநாயனார் கோயிலும், பட்டணத்தில் மல்லீசுவரார், ஏகாம்பரேச்வரார், கச்சாலேஸ்வரார், கந்தசாமி கோயில், முதலிய சிவாலயங்களிருக்கின்றன.

பீபில்ஸ்பார்க்— 1859 வருஷத்தில், ஏற்படுத்தப்பட்டது. ஜனங்கள் மாலை காலங்களில் மனோல்லாசமாய் காலங்கழிக்கத்தக்கதொருசிங்காரத்தோட்டம். இந்த தோட்டம், ஸென்ட்ரல் ஸ்டேஷனுக்குப் பக்கத்திலிருக்கின்றது. 116-ஏகர் விஸ்தீரண முள்ளது. 5-மைல்நீளமுள்ள ரோட்டுகளையுடையது.

இதில் 1887-ஞு 1,79,000-ரூபாய் செலவில் கட்டப்பட்ட விக்டோரியா நகரமண்டபம், மூர்மார்க்கட், என்கிற காய், கரி, கிழங்கு, பச்சை பதார்த்தங்கள், மச்சவகை, பக்ஷிவகை, மாமிசவகைகளும், மற்ற பொருள்கள் முதலியவை விற்கும்பெரியகடையும், 8,00000-ரூபாய் செலவில் அதிக அழகாய் கட்டப்பட்டிருக்கிற முனிசிபல் ஆபீஸும், பலவித உயிர்பிராணிகளைச் சேர்த்து வைந்திருக்கிற மிருககாக்ஷி சாலையுமிருக்கின்றன. மைசூர், பரோடா,

கல்கத்தா, டில்லி, பர்டுவான், ஜெய்பூர், முதலியஇடங்களில் அமைக்கப் பெற்றிருக்கிற சிங்காரதோட்டங்களைப் பார்த்தவர்களுக்கு இது ஒதுங்கு மிடமாகவே தோன்றும். இந்தியாவிலுள்ள சிங்காரத் தோட்டங்களில்ஜெய்பூரிலுள்ள (இராமநிவாஸ்) என்னும் சிங்கார தோட்டமே முதன்மை பெற்றதென்பேன்,. இரண்டாவது பர்டுவானிலுள்ள தோட்டம். இந்த சிங்காரத்தோட்டம் தவிர வேறுதோட்டங்களிருப்பினும் அவைகள்வெளியூரார்களுக்கு இனிமை தராதாகையால் அவைகள் இங்கு எழுதப்படவில்லை.

மாலை காலத்தில் இதற்கு பக்கத்திலுள்ள சென்டரல் ஸ்டேஷனில் விளக்குகள் எரியும் அழகைப்பார்த்தால் பூர்ணசந்த்ரோதயம் பூமியில்இறங்கி இருக்கிறது போலவே தோன்றும்.

மியூஸியம்— பல பொருள் காட்சி சாலை. இது எழும்பூரிலிருக்கும் ஓர் நேர்த்தியான கட்டடம். நாநா விதமான நூதன வஸ்துக்களையும், வினோத பொருள்களையும், கொண்டு வந்து சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு நாடகசாலையும், பெரியதொரு புஸ்தகசாலையும் இருக்கின்றன. இதற்கு பக்கத்தில் பிரஸவ ஆஸ்பத்திரியுமிருக்கின்றது.

எழும்பூர் ரெயில்வே ஸ்டேஷன் சென்ட்ரல் ரெயில்வே ஸ்டேஷன் அதைச்சார்ந்த பெரிய கட்டடங்கள் காட்சிக்குறியன,

ஹைகோர்ட்— சென்னையிலுள்ள கட்டடங்களில் மிகச்சிறந்தது. இக்கட்டடத்திலுள்ள சிகரங்களில் அதிக உயர்ந்த ஒரு சிகரத்தில் கப்பலோட்டிகளுக்கு 20-மைல் தூரம் வழிகாட்டக்கூடிய விளக்குக்கூண்டு ஒன்று இருக்கிறது (18, 000-மெழுகுவர்த்தி வெளிச்சமுள்ளது. இது நாலாபக்கங்களிலும் 20-மைல் தூரம் தெரியும் இதன்மேல் ஏறிபார்க்கலாம் (கட்டணம் இரண்டணு)

மௌண்ட் ரோட்— இதுகோட்டையில் இருந்து பரங்கிமலை வரையில் 8-மைல் தூரமுள்ள அழகிய பெரிய சாலை. இச்சாலையிலுள்ள கவர்னர் வீடும், பெரிய கட்டடங்களும், கண்கவரும்படியான பெரிய பெரிய வெள்ளையர் கடைகளும், பிரதிமைகளும், எண்ணற் கரியன.

மெரிஞ— கடலோரமாய் ஆங்கிலேயர்களும், சுதேச கனவான்களும், சாயந்திர வேளையில் சௌக்கியத்துக்காக உலாவும் இடம். 6-மணிக்கு இவ்விடத்திலிருக்க மிக இனிப்பா யிருக்கும்.

சேப்பாக்கம்— இவ்விடத்தில் வெகு அழகாய் கட்டப்பட்ட கலசமஹால், பிரசிடென்சி காலேஜ் செனெட் ஹௌஸ், இஞ்சினியரிங் காலேஜ், மீன் காலேஜ், (அற்புதக் காட்சி. அவசியம் பார்க்கவேண்டியது) முதலி கட்டடங்களிருக்கின்றன.

கோத்தவால்சாவடி— இது ஒரு பெரிய சுதேசி மார்க்கட். வீட்டிற்கு வேண்டிய எல்லா உணவுப் பொருள்களும், பதார்த்தவகைகளும், பழவகைகளும், மற்ற எல்லாபொருள்களும், கிடைக்கக்கூடிய இடம்

குஜிலிக்கடை.— சைனபஜார் வீதி. மாலை காலத்தில் எப்போதும் ஜன நெருக்கமுள்ள இவ்வீதியைப் பார்க்க வெகு விநோத விழாவாயிருக்கும். செலவழிக்க மனம் வாராதவர்களும் வாங்கக்கூடிய துணி மணிகளும், கண் கவரும் பழதினுசுகளும், சித்திரப்படங்களும், பொன் வெள்ளி ஆபரணங்களும், செம்பு பித்தளை வெங்கல பாத்திரங்களும், வாசனை திரவியங்களும், குண்டு, ஜோடு, கொம்பு, தடிகளும், மிட்டாய் தினுசுகளும், புஸ்தகங்களும் மற்றும் பலவஸ்துக்களும் விற்கும் கடைகள் எண்ணிறந்தன, வேடிக்கைப் பார்பதிலேயே மனம் செலுத்தாமல் அப்போதுக் கப்போது தங்களுடைய ஜேபியிலும் மடியிலும் வைத்திருக்கும் புணப்பைகளை கவனித்து வரவேண்டும். இவ்விடத்தில் முடிச்சவிழ்க்கும் பேர்வழிகள் அதிகம். இங்கு விளக்கு வெளிச்சம் போராத குறை யொன்றுண்டு. சென்னை நகரசபையார் இதை கவனித்து ஜியார்ஜ் அரசரின் உருவச்சிலைக்கு எதிரில் அதிக வெளிச்சம் தரக்கூடிய கொத்துவிளக்கு, ஒன்றை அமைக்க பெற்றால் வெகு நலமாயிருக்கும்.

அரக்கோணம்(ஜ).— காஞ்சீபுரத்துக்குச் செல்வோர் இறங்க வேண்டிய ஸ்டேஷன். காஞ்சீபுரத்தின் விஷயங்களை (முதல் பாகம் 77-ம் பக்கத்தில் காண்க.

ரேணிகுண்டா (ஜ). திருப்பதிக்கும் காளஸ்திரிக்கும் செல்வோர் இறங்க வேண்டிய ஸ்டேஷன். திருப்பதி விஷயங்களை முதல் பாகம் 190-ம் பக்கத்தில் காண்க.

**குண்டகல்**— இது சென்னைக்கு வடமேற்கே 276-மைலிலிருக்கிறது. கிழக்கே பெஜவாடாவிலிருந்தும், மேற்கே ஹூப்ளியிலிருந்தும், தெற்கே பெங்களூரிலிருந்தும், வரும் மீடர் கேஜ் லயன்கள் வெகு தூரத்திலிருந்து வந்து இங்குசேருவதினால் இது ஒரு பெரியஜங்ஷன் ஸ்டேஷனாக இருக்கின்றது. ஸ்டேஷனை விட்டு வெளியில் போனால் தங்குவதற்கு சௌகரியமான இடமில்லை. ஜலசௌகரியமும் யில்லை, ஸ்டேஷனில் சாப்பாடு ஓட்டலும், சிற்றுண்டி சாலையும், பழக்கடைகளும் இருக்கின்றன.

கிஷ்கிந்தை, ஹம்பி, விரூபாக்ஷம், துங்கபத்ரா நதி இவைகளை தரிசிக்க விரும்பிகிறவர்கள் இங்கிறங்கி மேற்கே ஹூப்ளிக்கு செல்லும் ரெயில் ஏறி, 71-மைலிலிருக்கும், ஹோஸ்பேட் ஸ்டேஷனில் இறங்கவேண்டும். 31-ம் பக்கம் பார்க்க.

**துங்கபத்திரா**— இது ஒரு சிறிய ஸ்டேஷன். புண்ணிய நதிகளில் ஒன்றாகிய துங்கபத்ராநதியில் ஸ்நானஞ் செய்வதற்காக, காசியாத்திரை செய்வோர்கள் இங்கிறங்குவார்கள். நதி ஸ்டேஷனுக்கு வடக்கே ½-மைலிலிருக்கின்றது. இங்கு ஒரு சிறிய அக்ரஹாரமும் சத்திரமும் இருக்கின்றன. கங்காஸ்நானம் துங்காபனம் என பழமொழியுண்டு. இங்கு ஒருநாள் தாமசிக்க விரும்புவோர்கள் பசனம் செய்துக் கொள்ள அரிசி முதலியவை யாவும் கையில் கொண்டு போகவேண்டும். இந்த ஸ்டேஷனுக்கு கிழக்கில் 8-மைலில் நதியின் கரைமேல் மந்த்ராலயம் என்னும் மஞ்சாலாவில் ப்ரசித்தமான இராகவேந்திர ஸ்வாமி திருப்பள்ளி இருக்கின்றது. மாட்டுவண்டிகள் கிடைக்கும். இந்நதியின் வடகரையிலிருந்து நைஜாம் இராஜ்யம். ஹம்பிக்கு செல்லுவோர் அங்கு துங்கபத்ராநதி யிருப்பதால் இங்கு இறங்கவேண்டிய ஆவசிகமில்லை. மெயில்வண்டிகளும் இங்கு நிற்கும்.

**இராயச்சூர்**—இது எம். எஸ். எம். கம்பெனியின் கடைசி ஸ்டேஷன். ஜி. ஐ. பி. ஆர், இங்கு வந்து கூடுவதால் இது ஒரு பெரிய ஜங்ஷனாக யிருக்கிறது. ஸ்டேஷனில் சாப்பாடு ஹோட்டலும், சிற்றுண்டிச்சாலையும் பழக் கடைகளு' மிருக்கின்றன. ஸ்டேஷனுக் கருகாமையில் ஜலவசதியோடு கூடிய சத்திரமொன்று இருக்கிறது. ஊரிலும் சத்திரங்களிருக்கின்றன. இவ்வூரில் சுற்றிலும் இரண்டு மதிள்களை யுடைய ஒரு புராதனக் கோட்டையொன்று இருக்கின்றது. இக் கோட்டையின் தென்புறமானது 290-அடி உயரமுள்ள ஒரு குன்றினால் காக்கப்பட்டிருக்கிறது. 1294-வருஷத்தில் விட்டல மஹாராஜனால் இது கட்டப்பட்டது. இந்த அரசனுடைய வரலாறுகளை 41½-அடி நீளமுள்ள ஒரேகல்லில் எழுதப்பட்டிருக்கிறது. ஆச்சரியம். கோட்டையின் மதிள் குன்றின்மேல் வைக்கப்பட்டிருக்கின்றது. 21-அடி நீளமுள்ள ஒரு பெரிய பீரங்கி யாவரும் காணும்படி வைக்கப் பட்டிருக்கின்றது.

**குருதுவாடி**— பண்டரீ புரத்துக்குச் செல்வோர் இறங்க வேண்டிய ஸ்டேஷன் இதுவே. இங்கு பார்ஸீ லைட் ரெயில்வே என்னும் ஒருசிறிய ரெயில் வந்து சந்திக்கிறது. இந்த மிகச்சிறிய ரெயில் வண்டியில் தான் இங்கிருந்து தெற்கே 32-மைலிலுள்ள பண்டரிபுரத்துக்குச் செல்ல வேணும். இராயசூருக்கு வடமேற்கே 209-மைல், வுட்கியிலிருந்து 58-மைல், பூனாவிலிருந்து 234-மைல்,

டோண்டு(ஜ)—இது இராயசூரிலிருந்து 277-மைலி லும், பம்பாயிலிருந்து 167-மைலிலும், மன்மாடிலிருந்து 146-மைலிலுமிருக்கின்றது. ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் ஒரு பெரிய தர்மசாலையும் ஒரு மைல் தூரத்தில் பீமாநதி யும் இருக்கின்றன. லோபத்தனத்தால் சிறிது பொருள் லாபத்தைக்கருதி மன்மாடு மார்க்கமாய் போவோர்பல ருளர். அவர்கள் புனு பட்டணத்தின் விநோதத்தையும், புகைவண்டி மலைத்துரப்புகளில் புகுந்து செல்லும் அற்புதக் காக்ஷியையும், கன்னேரி குகைகளையும், அழகிய பம்பாய் பட்டணத்தின் காட்சியையும், பஞ்சவடியில் ஸ்ரீ ராம பிரான் சேவையையும் கோதாவிரி ஸ்நானத்தையும் ஒருங்கே இழந்து விடுவார்கள். இவர்களது துர்ப்பாக்கிய மென்னே! பம்பாய் சென்று போவதே பலவிதத்திலும் நன்று.

பூனு—இது மதரூஸ் ரெயில்வே இறுதி ஸ்டேஷன், ஜி. ஐ. பி. ஆர். ரெயில்வேயுடன் வந்து சேருகின்ற ஒரு பெரிய ஜங்ஷன் ஸ்டேஷனுயிருக்கின்றது. பம்பாயிலி ருந்து 119-மைலிலும், இராயசூரிலிருந்து 324-மைலிலும் மதராஸிலிருந்து 665-மைலிலும் பங்களூரிலிருந்து 625-மைலிலும், பண்டரிபூரிலிருந்து 147-மைலிலும், இருக் கிறது. இது ஒரு போது வித்வான்களுக்கு தனச்சாலையாக விருந்தது. புராதனமான ஒரு அழகிய பட்டணம். வாச யோக்யமாய் எக்காலத்தும் சீதோஷ்ணம் மிதமாயிருக்கும். முள்ளா, மோட்டா, என்று இரண்டு நதிகள் இப்பட்டணத் தில் கூடுகின்றது. கூடுமிடத்தில் சிவாலயமும், விஷ்ணு வாலயமும், இருக்கின்றன. இந்தப் பட்டணத்திற்கு தென் மேற்கில் 3-மைல்தூரத்தில் ஓர் மலையின்மிசை பார்வதி கோயில் இருக்கிறது. அவசியம் பார்க்கத்தக்கது. ஸ்டேஷனில் சாப்பாடுஹோட்டலும், சிற்றுண்டிசாலையும்

இருக்கின்றன. ஸ்டேஷனுக்கு சமீபத்தில் அழகாய் அமைக்கப்பெற்ற தருமசாலைகளிருக்கின்றன. இந்ததருமசாலைகளில் இறங்குபவர்களிடம் ஐந்து ரூபாய் முன்னதாக வாங்கிகொண்டுக் புஸ்தகத்தில் பதிவுசெய்துவைக்கிறார்கள். மூன்று நாள் தங்கலாம். போகும்போது ஐந்து ரூபாயை கொடுத்து விடுகிறார்கள். சத்திரங்களில் விரகு கொண்டு எரிக்கக்கூடாது, இரும்பு அடுப்பில் கரி போட்டுத் தான் சமயல் செய்ய வேண்டும். வேண்டுமானால் இரும்பு அடுப்பு கொடுப்பார்கள். இம்மாதிரியே பம்பாய் முதலிய இடங்களிலுமுண்டு. தருமசாலைகள் எல்லாம் அழகிய கட்டடங்களா யிருப்பதால் அடுப்பு புகையினால் சுவர்களும் கூரைகளும் அழுக்காய் விடும் என்பதேயாம். மல ஜலம், கழிக்குமிடமெல்லாம் சலவைகற்களால் பரப்பப்பட்டிருக்கின்றன வென்றால் சத்திரத்தின் அமைப்பைக் கேட்பானேன்.

இந்த பட்டணத்திலும் பம்பாய் நகரத்திலும் வண்டிக்காரர்கள் வெகு யோக்கியர்கள். ரூபாய் ஒன்று சத்தம் பேசி வாங்கும் போது பேசினது ரூபாய் இரண்டென்பர். இதற்குக் காரணம் நமக்கு இந்துஸ்தான் பாஷை தெரியாததால் நம்மை ஏமாற்றுகிறார்கள். போலீஸ்காரரிடம் சொல்லினும் பயனில்லை.

**பம்பாய்.** Bombay.—இந்தியாவிலுள்ள பெரிய பட்டணங்களில் இரண்டாவது. மேலை சமுத்திரக் கரையிலுள்ள ஒரு தீபகல்பம். இப்பட்டணத்தின் துறைமுகத்தைப்போல் இயற்கையாய் அமைந்தது. உலகில் வெகு சொற்பமே. பலவித ஜாதியார் பல தொழில் பூண்டு இங்கு வசிக்கின்றனர். அவரது அணிகளும் ஆடைகளும் பாஷைகளும் தோற்றங்களும் வெவ்வேறா யிருக்கின்றன. அந்திப் பொழுதில் ஆவணத்தெருவில் எள்விதைப்பினும்தாழவிழா.

வீடுகளெல்லாம் ஐந்தாறு அடுக்குகளுடையனவாய், பெரியனவாய் பளிங்குத் தொழில் அமைந்தனவாய் யிருக்கின்றன. மயன் என்னும் தெய்வத்தச்சனால் நிர்மாணிக்கப்பட்டதாக சொல்லப்படும் அநேக மாடமாளிகை கூடகோபுரங்களைக்குறித்து நமது புராணங்களில் படித்திக்கிறோம். நேரில் கண்டதில்லையன்றோ? அழகிலும் செல்வத்திலும் நாகரிகத்திலும் பக்தியிலும் சிறந்து விளங்கும் இந்த அழகிய பட்டணத்தை வருணிக்க நம்பரமல்ல.

இந்தப்பட்டணத்தை மேல் நாட்டார் "Fair Heaven." அழகிய தேவலோகம் என்றும் The "Gate of India." இந்தியாவின் முகவாசல் என்றும் புகழ்கின்றனர்.

இப்பட்டணத்தின் ஜனத்தொகை 9,30,000. இதில 6-லக்ஷம் இந்துக்கள், 2-லக்ஷம் மகமதியர்கள். ½-லக்ஷம் பார்ஸிகள். பார்ஸிஜாதியார் எல்லோரும் தனவந்தர்கள். அவருள் விலைமாதரும் பிச்சைக்காரரும்மில்லை. மற்ற ஜாதியார்களில் விலைமாதர்கள் அதிகமுளர். அவ்விலைமாதர்கள் ஊணர், மிலேச்சர்முதலிய எந்த ஜாதியாரையும் வரையின்றி புணர்வர். பார்ஸி ஜாதியார், அவரில் மரித்தோரை தகனமும் புதைப்பதும் செய்வதில்லை. ஸைலெண்ட்வர் என்னும் பெயரிட்டு வைத்திருக்கின்ற மலைமிசை குளம்போல பெருங்குழி வெட்டி அதன்மேல் போட்டிருக்கிற இரும்புப் பந்தலில் போடுவர். பருந்தும் கழுகும் காக்கையும் அப்பிணத்தை பிடுங்கித்தின்ற பின்பு எலும்புகள் அக்குழியினுள்ளே விழும். இவ்வாறு செய்ய அவர் கருத்து யாதோ ?

**சத்திரங்கள்—ஓட்டல்கள்.** இப்பட்டணத்தில் சத்திரங்கள் அனேக மிருப்பினும் மாதவபாக், இருபர்க் என்ற இரண்டும் விசாலமுள்ளதாயும் சுத்தமாயு மிருக்கின்றன.

இத் தருமசாலே யுடையார் பிரயாணிகளிடத்தில் 5-ரூபாய் முன்னதாக வாங்கிக்கொண்டு புஸ்தகத்தில் பதிவு செய்து வைக்கிறார்கள். மூன்று நாள் தங்கி இருக்கலாம். போகும் போது 5-ரூபாயை திருப்பிக்கொடுத்து விடுவார்கள். சத்திரங்களில் விரகு கொண்டு எரிக்கக்கூடாது. இரும்பு அடுப்பில் கரிபோட்டுத்தான் சமயல் செய்யவேண்டும். வேண்டுமானுல் இரும்பு அடுப்பு சாமான்கள் கொடுப்பார்கள். இம் மாதிரி புனமுதலிய விடங்களிலுமுண்டு. தருமசாலேகளெல்லாம் அழகிய கட்டடங்களா யிருப்பதால் அடுப்புப்புகையினுல் சுவர்களும் கூரைகளும் அழுக்காய் விடும் என்பதெயாம். மலஜலம் கழிக்கு மிடமெல்லாம் சலவைக்கற்களால் பரப்புபட்டிருக்கின்றன வென்றால், சத்திரத்தின் அமைப்ப சொல்லவேண்டுமோ!

கல்பாதேவி ரோட்டுக்குச் சமீபமாய் பிக்கட் ரோட் என்னு மிடத்தில் சென்னே பிராமணர் ஹோட்டல் ஒன்று இருக்கின்றது.

இவ்வூர் பார்ப்பா ரெல்லாம் பாத்திரத்தை வாயில் வைத்து நீர் பருகுவர், தாம்பாளத்தில் தின்பர். திராவிட தேசத்து வேளாளர்களும் சூத்திரர்களும் தாமுண்ணும் கலத்தில் தாமுண்பரேயன்றி பிறர்கலத்தி லுண்ணார். தமது கலத்தை பிறருக்கும் கொடார் என்பத் பிரஸித்தம். இந்தப்பட்டணத்தில் அந்தணருண்ணும் சோற்றுக்கடைக்களில் தட்டுக்ளே அடுக்கப்பட்டிருக்கின்றன். எல்லா ஜாதியாரும் இதில்தான் உண்ண வேண்டும. இலேகள் போட்டு பரிமாறுவதில்லே. சென்னேயிலும் இந்த துராசாரம் சில அனுசாடி பார்ப்பார்களால் பழக்கப்பட்டு வருகிறது.

வண்டிகள்.—ஒத்தைகுதிரை இரட்டைக்குதிரை பூட்டிய கோச்சு வண்டிகள் மிகுந்தமலிவு. டிராம் வண்டிகள் பெரிய வீதிகளிலெல்லாம் ஓடுகின்றன. கோச்சுவண்டிக் காரர்கள் வெகுயோக்கியர். வண்டிஏறும்போது ரூபாய் ஒன்று சத்தம்பேசி வாங்கும்போது ரூபாய் இரண்டென்பர். இதையாரிடத்தில் முறையிட்டாலும் பிரயோசனமில்லை. முதலில் கண்டிப்பாய் பேசிக்கொள்ள வேண்டும். மாட்டு வண்டியும், ஜட்கா வண்டியும் மருந்துக்கும் அகப்படாது.

### பார்க்கவேண்டிய இடங்கள்.

1 கிராபோர்ட் மார்கெட்.
2 விக்டோரியா தோட்டம்.
3 பொருட் காட்சி சாலை.
4 விக்டோரியா டெர்மினஸ் ரெயில் ஸ்டேஷன்-
5 ஹைகோர்ட்.
6 நகர மண்டபம்.
7 யூனிவர்ஸிடி டவர்.

நாசிக்ரோட்-பம்பாயிக்கு 177-மைல்தூரத்திலுள்ள இந்தஸ்டேஷனுக்குவடமேற்கே 5-மைலில் நாசிக் பட்டணமிருக்கின்றது. 38-ம் பக்கம்பார்க்கவும்.

**மன்மாட்** (ஜ)—டோண்டிலிறங்கிச் செல்வோர் இவ்வூர் வந்து வேறுவண்டி ஏறவேண்டும். ஸ்டேஷனுக்கு அருகாமையில் வசதியான தருமசாலையும் சிற்றுண்டிக் கடைகளுமிருக்கின்றன,

**பசாவல்(ஜ)**—நாகபூருக்குச் செல்வோர் இங்கிறங்கி வெறுவண்டி ஏறவேண்டும். இரண்டுமைல் தூரத்தில் அரைமைல் அகலமுள்ளதாய் தப்தி நதம் ஓடுகின்றது. கீழ்திசை தோன்றி மேற்றிசை செல்லும் ஆற்றுக்கு நதம் என்று பெயர். தருமசாலை உண்டு.

**கண்டுவா(ஜ)** தருமசாலை உளது. பிரயாணிகள் தங்கி சிரமபரிகாரம் செய்து போக இதுவசதியான இடம்; இண்டோர், உஜினி, ஆஜ்மீர் புஷ்கரம், செல்வோர் வண்டி மாற வேண்டிய ஜங்ஷன். 59,60-வது பக்கங்களில் பார்க்க.

**ஜப்பல்பூர்(ஜ)**-ஸ்டேஷனுக்கு அதிசமீபத்தில் தருமசாலையிருக்கின்றது. ஸ்டேஷனுக்கும் பட்டணத்திற்கும் ஒரு மைல்தூரமுள்ளது, வண்டிகளுண்டு. பட்டணத்திலும் தங்க இடங்கிடைக்கும். புண்ணியநதி ஏழிலொன்ருகிய நருமதா நதம் பட்டணத்திற்கு 6-மைல்தூரத்திலிருக்கிறது.

**மாணிக்பூர்(ஜ)**-சித்திரகூடம் செல்வோர் இறங்க வேண்டிய ஸ்டேஷன். தருமசாலையிருக்கிறது. சித்திரகூடத்தின் விஷயங்களை 56-வது பக்கத்தில் பார்க்கவும்.

**அல்லஹாபாத்(ஜ)**-ஜப்பல்பூரிலிருந்தும், சித்திரகூடத்திலிருந்தும் பிரயாகைக்குச் செல்வோர், இறங்கவேண்டிய ஸ்டேஷன். பிரயாகை 3-மைல்தூரத்திலிருக்கிறது. இந்த ஸ்டேஷனுக்கு வடக்கே 100-மைலில் அயோத்தியும், கிழக்கே 100-மைலில் காசியுமிருக்கின்றன. பிரயாகையின் விஷயத்தை 65-வது பக்கத்திலும் காசியின் விஷயத்தை 71-வது பக்கத்திலும் அயோத்தியின் விஷயங்களை முதல் பாகம் 104-வது பக்கத்திலும் காண்க.

பெரும்பாலோர் அயோத்திக்குச் செல்லாமலே காசிக்கும் கயாவுக்கும் சென்று திரும்பிவிடுகிறார்கள். அயோத்தி முத்திநகரில் முதன்மைபெற்றதென்பதை அவர்கள் உணர்ந்திலர். காசி, கயை, பிரயாகை இம்மூன்றும் உத்தமோத்தம க்ஷேத்திரங்களே யாகிலும் கிருபாமூர்த்தியாகிய சிவபெருமானுக்கு ஹ்ருதயகமல வாசியான ஸ்ரீராமமூர்த்தியின் அவதாரஸ்தலமாகிய அயோத்திக்குச் சென்று வஸிஷ்டை என்னும் ஸாயூநதியில் புனல்படிந்து தாரகநாமனை சேவியாமல் செல்வது அவரவர் விதிவழி அனுசரித்தன்றோ விருக்கும்.!

காசி.—காசியின் விஷயங்கள் யாவற்றும் இப் புஸ்தகத்தில் விஸ்தரேண சொல்லப்பட்டிருக்கின்றது.

இங்கு நின்றும் ஹரித்துவாரம் செல்வோர் அயோத்தி (முதல்பாகம் 104-ம் பக்கம் காண்க) லக்ஷ்மண்புரி (அவிசியம் பார்க்கவேண்டிய பட்டணம்) நைமிசாரணியம் (முதல் பாகம் 106-வது பக்கம் பார்க்க) கான்பூர் (வழியாக) ஆக்ரா (முக்கியமாய் பார்க்கவேண்டியதும் உலகில் மிகச் சிறந்ததுமான டாஜ்மஹால் முதலிய கட்டடங்களையுடைய அழகிய பட்டணம்.) மதுரை-ஆய்பாடி (முதல் பாகத்தில் காண்க) பிருந்தாவனம் கோவர்த்தனம், (60-ம் பக்கம் பார்க்க) டில்லி (பார்க்க வேண்டிய பட்டணம்) குருக்ஷேத்திரம் (63-வது பக்கம் பார்க்க) அம்பாலா (ஸஹரன்பூர் லக்ஜார் (வழியாக) ஹரித்துவாரம் (63-வது பக்கம்) செல்லவேண்டும். ஹரித்துவாரத்தில் நின்றும் பதரி நாராயணம் செல்லும் மார்க்கவிவரங்களையும் மற்ற விஷயங்களையும் முதல் பாகத்தில் கண்டுகொள்க.

**மொகல்ஸிரே (ஜ).**—ஈஸ்ட் இண்டியன் ரெயில்வே யும் ஔட்ரோஹில்கண்ட ரெயில்வேயும், சந்திக்கிறது. ஒரு பெரிய ஜங்ஷன்ஸ்டேஷன். இங்கிருந்து காசி 7-மைலிலும், கயா 126-மைலிலும், பிரயாகை 96-மைலிலும் இருக்கின் றன. தருமசாலை யிருக்கின்றது சிற்றுண்டிச் சாலைகளு முண்டு. வசதியான இடமேயாகிலும் இங்கு வண்டி மாற வேண்டுமேதவிர இறங்க வேண்டிய ஆவசியகமில்லை.

**கயா.**—ஸ்ரீமத்கயா பித்ருகடனை தீர்த்து வைக்கும் க்ஷேத்திர ராஜா எனப்படும். இதைதவிர்த்து மற்றதீர்த்த க்ஷேத்திரங்களில் செய்வதெல்லாம் மத்யமபக்ஷமென்று பெரியோர் கொள்கை. இந்த க்ஷேத்திரத்தைப் பற்றின முழுவிபரங்களையும் 68-வது பக்கத்தில் பார்க்கவும். லோக ப்ரஸித்தமான க்ஷேத்திரம். ஸ்டேஷனிலேயே கயாவாளி களின்குமஸ்தாக்கள் அழைத்துக்கொண்டுபோககாத்திருப் பார்கள்.

**கோமோ (ஜ)**—ஈஸ்ட் இந்தியா ரெயில்வேயுடன் பே. நா. ரெயில்வே கூடும் பெரியஜங்ஷன் ஸ்டேஷன். இங்கு நின்று கயா 105-மைலிலும், கல்கத்தா 187-மைலிலும். கரக் பூர் 151-மைலிலும் இருக்கின்றன. காசியிலிருந்து கல்கத் தாவுக்குப் போகாமலே ஜகந்நாதம் செல்வோர் பலருளர். அவர்கள் ரெயில்செலவில் சிறிது லாபத்தைக்கருதி பெரிய கஷ்ட நஷ்டங்களுக்கு உட்படுகிறார்கள், கல்கத்தா மார்க்க மாய் வந்தவர்கள் வேண்டுமானால் திரும்பிச் செல்லும் போது கஷ்டத்துடன் இந்த குறுக்கு மார்க்கம் போகலாம். கல்கத்தா சென்று போவதே மெத்தசௌகரிய மென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது.

**கல்கத்தா. Calcutta**—இந்த கல்கத்தாநகரமானது ஹூக்ளி நதியின் கரைமேல் கட்டப்பட்ட தொருபெரிய பட்டணம். ரெயில்வே ஸ்டேஷன் பெயர் ஹௌரா. பெரிய அழகிய கட்டடம். ஸ்டேஷனுக்கும் கல்கத்தா நகரத்திற்கும் இடையே ஹூக்ளி நதி ஓடுகின்றது. இந்த நதியைக்கடந்து பட்டணத்திற்குள் பிரவேசிக்க ஓர் அழகான மிதப்புப்பாலம் அமைக்கப் பட்டிருக்கின்றது, இந்த அழகிய பட்டணம் வங்காள இராஜதானிக்கு பிரதான பட்டணமாகவும் இந்தியாவிலுள்ள பட்டணங்களுக் கெல்லாம் தலை நகரமாகவுமிருந்து விளங்கிக்கொண் டிருக்கின்றது. இதை தேவேந்திரன் பட்டணத்திற்கு ஒப்பிட்டு வருணித்திருக்கிறார்கள். லண்டன் மாநகருக்கு இரண்டாவதாகக் கருதப்படுகிறது. The "City of Palaces" 'மாளிகா நகரம்" என்று மேல் நாட்டார் வருணித்திருப்பதே சான்று. ஐரோபியருடைய 'கட்டிடங்கள் கிரேக தேசத்து சிற்பாலங்காரத்தின்படி ப்ரம்மாண்டமாகக் கட்டப்பபட்டிருக்கின்றன.

இங்கு ஆங்கிலத்துக்கு விசேஷமதிப்பில்லை. அனைவரும் பேசுவது ஹிந்துஸ்தானிதான். வங்காளிகள் வைராக்யமுள்ளவர்கள். வங்கபாஷையிலேயே எல்லாம் வியவஹாரங்களையும் வைத்துகொள்வர்கள். ஆங்கிலம் படித்தவர்களுங்கூட வங்கபஷையிலேயே பேசுவர். நமது தமிழ் நாட்டினரோ சிறிது ஆங்கிலம் கற்றிருப்பினும் அதில்தான் உளறுவார்களேயன்றி, சுயபஷையில் பேசார், தமிழ்புஸ்தகங்களை வைத்திருந்தாலும், சில தாய் தந்தையர்களுக்கு கோபம் உண்டாய் விடுகின்றது. தமிழ் உனக்குச்சோறு போடுமா, இங்கிலீஷைப்படி என்று தங்கள் குமாரர்களைக் கோபிப்

பார்கள். வங்காளிகள் ஜாதிமதா சாரத்தில் கண்டிப்புள்ள வர்கள். தெய்வபக்தியுள்ளவர்கள். ஸ்திரீகளின் முகத்தை புருஷர்கள் பார்க்கமாட்டார்கள். விதவைகளுக்கு கட்டுப் பாடு அதிகம். அவர்கள் வெற்றிலே பாக்கு தொடலாகாது. வெள்ளை ஆடையே உடுத்தவேண்டும். ஒருவேளை போஜனமே செய்யவேண்டும். பிராமணர்கள் மாமிசம் உண்பார்கள் மச்சம் புசிப்பது ப்ாபமில்லையாம். வெங்காயம் உண்பது பாபமாம். இது ஒரு ஆசாரம். பி. ஏ. எம். ஏ. வரையில் வாசித்து விட்டு வியாபாரத்தில் தங்கள் சிந்தையை ஊன்றுவோர் வங்காளிகளில் அதிகம். தங்கள் தேசம் தங்கள் நாடு என்ற தேசபக்தியில் கல்கத்தா வாசிகளின் பிரசித்தி எல்லோரும் அறிந்ததே.

## சத்திரங்கள்

பாபுஷான்தேவ் தர்ம்சாலா—150. ஹாரிஸன் ரோட்.
பூல்சந்த் தர்மசாலா—9 ஷாமாபாயி லேன், பாராபஜார்.
ராஜா சூர்ஜ்மல் தர்மசாலா—345. மல்லிக்ஸ் வீதி.
லக்ஷ்மி நாராயண் தர்மசாலா-57. பன்ஸ்டோலா தெரு.

## ஹோட்டல்கள்.

ராஜாசிவபாதல் என்னும்ஹிந்து ஹோட்டல் (ஹெளரா ஸ்டேஷனுக்குச் சமீபம்) பராபஜார் ஹோட்டல் (ஷாமா பாய்ஸ் வீதி.) ஸோபாராம் பைஸாக் சந்தில் இரண்டு ஸ்மார்த்த பிராமணர்கள் ஹோட்டல்களு மிருக்கின்றன.

## பார்க்க வேண்டிய காட்சிகள்.

1. காளிகட்டம்—காளிகோயில் முக்கிய தரிசனம். இந்த கோயிலுக்குச் சமீபத்தில் கங்கைமா நதியின் பெரிய ஓடையும் இருகின்றது. இந்த துர்க்காதேவியின் பிரதிமை

சுவர்ணத்தினுல் அஷ்ட புஜங்களுள்ளதாயும், நாக்கைநீட்டி காட்டிகொண்டும், நெற்றியில் செந்தூரப் பொட்டிட்டும் மண்டையோடுகளை மாலையாகத் தரித்துக்கொண்டும், ஒரு கையில் கத்தியும், மற்ருெருகையில் தாம் வெட்டிக்கொன்ற அசுரனுடைய தலையையும், இரண்டு மனிதர்களுடைய கபாலங்களை இரண்டு காதுகளுக்கு அணிகளாகவும், தான் கொன்ற அசுரனுடைய கைகளையே ஆடையாகவும், தனது கால்களில் ஒன்றை தன் கணவன் துடை மீதிலும், மற்றதை அவன் புஜத்தின் மீதிலும், வைத்து மிதித்துக்கொண்டிருக்கும் பாவனையாக இருப்பதைப் பார்க்கும்போது பயத்தை யுண்டு பண்ணுகிறது.

2. பலபொருள் காக்ஷி சாலை—இது இந்தியாவிலுள்ள பொருள்காட்சி சாலைகள் எல்லாவற்றிலும் மிகப் பெரியது. பார்த்து வெளியேவர மனமிருது. இது சௌரங்கி ரோட்டிலிருக்கின்றது,

3. ஜூலாஜிகல் கார்டன்ஸ்—நாநாவித ஜீவஜந்துக்களை வைத்திருக்கும் காட்சிச் சாலை. இது அலிபூரிலிருக்கிறது.

4. பத்ரிதாஸ் ஜெயின் மந்திர்—பலவர்ணக் கண்ணுடிகளால் அத்யாச்சரியமாய் கட்டப்பட்டிருக்கிற ஜெயினர் கோயில் பார்க்கத் தவரலாகாது.

5. பொடானிகல் கார்டன்—அனேக விதமான தாவர வஸ்துக்கள் அடங்கிய பெரிய சிங்காரத் தோட்டம்.

6. புதிய மார்கெட்—இந்த பெரிய அழகான மாக் கட்டைப்போல இந்தியாவில் வேறெங்கும் காணப்படவில்லை. இதனழகை வருணிப்பதென்ருல், கவிச்சக்கரவர்த்தியாம் கம்பன் போல்வாரன்றி மற்ருேர்களால் சாத்தியப்படாதென்பது நமது துணிபு.

7. டவுன்ஹால். நகரமண்டபம்.--இது ஒரு பிரம்மாண்டமான கட்டடம். எஸ்பிளனேடில் உள்ளது.

**கரக்பூர் (ஜ).**-சென்னை, கல்கத்தா, பம்பாய், ஆத்ரா, கோமோவிலிருந்து வரும் ரெயில்வண்டிகளெல்லாம் இங்கு வந்து சந்திக்கின்றமையால் இது ஒரு பெரிய ஜங்ஷன் ஸ்டேஷனாக யிருக்கின்றது. வண்டிமாறவேண்டிய ஜங்ஷனாகையால் எப்போதும் கூட்டம் அதிகமாகவே இருக்கின்றது. வெகு ஜாக்கிரதையாக விருத்தல் வேண்டும். இந்த ஸ்டேஷனிலுள்ள மிட்டாய் கடைகளைப்போல் வேறெங்குமில்லை இரண்டு மூன்று தருமசாலை களிருக்கின்றன. யாத்திரிகர்கள் தங்குவதற்குத் தகுதியான வசதியில்லை. ஆனால் ஜலவசதியுண்டு. பொருள்செலவுக்கு அஞ்சி 72-மைலிருக்கும் கல்கத்தாவுக்குப் போகாமல் கோமோ வழியாய் காசிக்குச் செல்வோர் பலருண்டு. இவர்கள் ரெயில் செலவில் சிறிது லாபத்தைக் கருதி பெரிய நஷ்டத்துக்குள்ளாகின்றனர். பல இடங்களில் ஏறி இறங்கிப் போவதென்றால் இடஞ்சலும் நஷ்ட கஷ்டங்களும் நேருமென்பதை கவனிக்கவேண்டும். கல்கத்தா சென்று போவதேமெத்த சௌகரியமென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது.

**கடகம்.**—இது மஹாநதி தீரத்தி லிருக்கின்றது. ஸ்டேஷனுக்கும் ஊருக்கும் ½-மைல்தூரமுள்ளது. தருமசாலையுண்டு. சௌகரியமானவிடம். ½-மைல்தூரத்திலுள்ள மஹாநதி ஸ்நானவிசேஷம்.

**புவனேஸ்வரம்.**--கடகம் ஸ்டேஷனுக்கு தெற்கே 18-மைலிலும், குர்தாரோட்டு ஸ்டேஷனுக்கு வடக்கே 11-மைலிலுமுள்ள இந்த ஸ்டேஷனிலிறங்கினால் 3-மைல் தூரத்திலுள்ள பிரஸித்தி பெற்ற புவனேஶ்வர க்ஷேத்திரத்தை அடையலாம் இவ்விடத்திலுள்ள பிந்து சரோவரம்

என்னும் தடாகத்தைச்சுற்றி ஒருகாலத்தில் 7000-கோயில்கள் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. இப்போது விமானங்களுடன்கூடிய 500-கோயில்களைக் காணலம். புவனேசுவர லிங்கமூர்த்தி முக்காலடி உயரமுள்ளது, "லிங்கராஜ் மஹாதேவ்" என்றுபெயர். சிற்பாலங்காரத்துடன் வெகுவிசித்திரமாய் வேலை செய்து அமைக்கப் பெற்றிருக்கிற. முக்தேஸ்வரர்கோயில் உலகக் கண்காட்சிகளிலொன்று. அனேக தருமசாலைகள் இருக்கின்றன. பண்டாக்களின் வீடுகளில் தங்குவதே உசிதம்.

குர்தாரோட்(ஜ)-கல்கத்தாவிலிருந்து 283-மைலிலும் சென்னையிலிருந்து 749-மைலிலுமுள்ள இந்த ஸ்டேஷனிலிருந்து கீழ் சமுத்திரக் கரையோரமாய் 30-மைலிலுள்ள பூரிக்கு கிளைரெயில்பிரிகிறது. பூரிக்குப்போக இவ்விடம் வண்டி மாறவேண்டும். இங்கு ஜலசௌகரிய முள்ளதேனும் சத்திரமும் ஹோட்டலுமில்லா குறையுண்டு. ஸ்டேஷனுக்கு அருகாமையில் சில கடைகளிருக்கின்றன. சிலசமயத்தில் 8-மணிநேரம் இங்கு தாமசிக்கவேண்டியதா யிருப்பதால் யாத்திரிகர்கள் வெகுகஷ்டப் படவேண்டியதா யிருக்கின்றது. அப்படி தாமசிக்க நேரிட்டால் வெகுஜாக்கிரதையாக விருத்தல் வேண்டும்.

சாக்ஷிகோபால்—குர்தாரோட்டிலிருந்து பூரிக்குச் செல்லும் ரெயில்பாதையில் 15-மைலிலுள்ளது. கோபால்ஜீ என்ற விஷ்ணுவாலயத்தால் சிறப்புற்றது.

பூரி—இந்த ஸ்டேஷன் வசதியானதே. இங்கு டிக்கெட்டு வாங்குவது வெகுகஷ்டம். ரூபாய் கொடுத்தால் சில்லரை கொடுக்கவே மாட்டார்கள். ஸ்டேஷனுக்கு இரண்டு

மைல் தெற்கில் சமுத்திரக்கரை யோரமாய் 26,000-ஜனத் தொகையுள்ள பூரி எனும் நகரம் உளது. ஜகந்நாதம் என்னும் க்ஷேத்திரத்துக்கு பூரி என்றபெயர் வழங்குகிறது. ஸ்ரீபுருஷோத்தம க்ஷேத்திரமென்று புராணப்பெயர். இது சுமார் இருபது அடி உயரமுள்ள மணல்மேடு. இதற்கு நீலாசலமென்றும் ஒரு புராணப் பெயருண்டு. ஹூக்ளி முதல் கோதாவரி வரையில் அரசு செலுத்தி வந்த இராஜா அணங்க பீமதேவர் என்பவர் 1198 வருஷத்தில் 7,50000-ரூபாய் செலவில் ஜகந்நாதன் சந்நிதியை கட்டிவைத்ததாகச் சொல்லப்படுகிறது. கோயிலின் கோபுரம் 192-அடிஉயரமுள்ளதாயும், செதுக்கிய கற்களால் சிற்பாலங்காரமாகக் கட்டப்பட்டதாகவும் மிருக்கிறது. கோயிலுக்கு வடக்கே ஒரு மைல் தூரத்தில் "இந்திரதூம்னு" என்ற ஒரு ஸ்தலமிருக்கின்றது. இரதோத்ஸவ சமயம் பெருமாள் இவ்விடத்தில் எட்டு நாள் எழுந்தருளிஇருப்பர். இந்த க்ஷேத்திரத்திற்கு வருஷம் தோறும் லக்ஷம்கணக்காக யாத்திரிகர்கள் வந்து போய்கேண்டே யிருக்கிறார்கள். ஆடிமாதத்தில் நடைபெறும் பெரிய உத்ஸவத்தில் தேர்திருவிழா அன்று குறைந்தது லக்ஷம் ஜனங்கள் கூடுவதைப் பார்க்கலாம். ஜகந்நாதம் விஷயங்களை 41-வது பக்கத்தில் பார்க்கவும்.

**ஸ்ரீ காகுளம் ரோட்**—சென்னையிலிருந்து 566-மைல். ஸ்ரீகூர்மத்துக்குச் செல்வோர் இறங்கவேண்டிய ஸ்டேஷன். ஸ்ரீகூர்மம் விஷயத்தை 35-வது பக்கத்தில் காண்க.

**விஜயநகரம்**—இராஜாவசிக்குமிடம். அரண்மனை முதலிய கட்டடங்கள் பார்த்தற்குறியன. ஸ்டேஷனுக்கு சமீபத்தில் வசதியான சத்திரமிருக்கின்றது. ஜல சௌக

ரியமில்லை. பட்டணத்தில் தருமசத்திரங்களுண்டு. இவ்விட மிருந்து 10-மைல்தூரத்தில் பத்மநாப க்ஷேத்திரமிருக்கின் றது. 39-வது பக்கம் பார்க்கவும்.

**சிம்மாசலம்**—ஸ்டேஷனுக்குக்கிழக்கே 3-மைலில்மலை யின் அடிவாரம் உளது. வண்டிகள் சொற்பம். கூலியாட் களுண்டு. ஜகந்நாதத்திலிருந்து வருபவர்கள் இங்குஇறங்கி போகலாம். எவ்விதத்திலும் வால்டேர் சென்று போவதே சௌகரியம். சிம்மாசலத்தின் பிரபாவங்களை 36-வதுபக்கம் பார்க்கவும்.

**வால்டேர் (ஜ)**—இது சென்னை இருப்பு பாதையின் இறுதி|ஸ்டேஷன். கல்கத்தா ரெயில் இங்குவந்து கூடுவதால் ஜங்ஷன் ஸ்டேஷன். ஸ்டேஷனில் ஹோட்டல்களும் சிற்று ண்டிச் சாலையுமிருக்கின்றன. இதற்கு இரண்டுமைல் தூரத் திலுள்ள விசாகப்பட்டணத்தில் பெரியதெரு விசாலமான சத்திரமும் பலஹோட்டல்களும், காபிகிளப்புகளு மிருக் கின்றன. வண்டிகளுண்டு. ஜல சௌகரியமுமுண்டு. விசாகப்பட்டணம் தந்த வேலைக்குப் பேயர்போனது இவ்விடமிருந்து சிம்மாசலம் 5-மைலிலிருக்கின்றது. 36-வது பக்கம் காண்க.

**கோதவிரி**:—இது பெஜவாடாவிலிருந்து 90-மைலி லுள்ளது. நதியின் பெயரே ஸ்டேஷன் பெயராக விருக்கின்றது. இது ராஜமந்திரியின் மேற்பாகம், சென்னை யிலிருந்து செல்வோர் இறங்கவேண்டிய ஸ்டேஷன். போகும்போது ராஜமந்திரி ஸ்டேஷனில் ஏறிப்போவதே சௌகரியம். இந்த நதியின் பாலம் $1\frac{3}{4}$ மைல் நீள முள்ளது.

இந்தியாவிலுள்ள பெரிய வாராவதிகளில் இரண்டாவது. கயாவிற்கு மேற்கிலிருக்கும் சோணபத்திரா நதியின் பாலம் முதன்மையானது. ஸப்த புண்ய நதிகளில் இது ஒன்று. இதற்கு விருத்த கங்கை என்றும் பெயர். ஸ்டேஷனுக்கு மேற்கே ½-மைலில் கோடிலிங்க ஸ்நானகட்டமும், கிழக்கே 3-மைலில் தவளேஸ்வரமும் இருக்கின்றன (39-பக்கம் பார்க்க) நதியின் கரைமேல் விசாலமான பெரிய சத்திரமிருக்கின்றது. ஹோட்டல்களும் சிற்றுண்டிச் சாலைகளுமிருக்கின்றன. பெரிய பட்டணமாகையால் எல்லா வசதிகளுமுண்டு.

**பெஜவாடா.** (ஜ):—இது மதராசுக்கு வடக்கே 268-மைலிலுள்ள ஒரு பெரிய ஜங்ஷன் ஸ்டேஷன். ஸ்டேஷனிலேயே ஹோட்டலும் சிற்றுண்டிச்சாலையுமிருக்கின்றன. ஸ்டேஷனுக்கு வெகு சமீபத்தில் மிக்க வசதியான பெரிய சத்திரமிருக்கின்றது. பட்டணமும் வசதியானதே. சப்த நதிகளில் ஒன்றாகிய கிருஷ்ணாநதி ஸ்டேஷனுக்கு தெற்கே ஒரு மைலிலிருக்கின்றது, ஸ்நான விசேஷம். நதியின் அணைக்கட்டு பார்க்க வேண்டிய காட்சிகளுள் ஒன்று. மங்களகிரியின் விஷயத்தை 40-வது பக்கம் காண்க.

**நெல்லூர்**—ஸ்டேஷனிலிருந்து மேற்கே 1½-மைல். உத்தரபினாகினிநதி தீரத்திலுள்ள இதற்கு சிம்மபுரி என்று புராணப் பெயர். சாயப் புடவைகளுக்குப்பேர்போனது. சிரமபரிகாரம் செய்து கொண்டு போவதற்கு சௌகரியமானயிடம். (31-வது பக்கம் பார்க்கவும்)

**கூடூர்**:—காளாஸ்திக்கும், திருப்பதிக்கும், செல்வோர் இறங்க வேண்டிய ஜங்ஷன் ஸ்டேஷன். ஸ்டேஷனிலேயே சாப்பாடு ஹோட்டலும் சிற்றுண்டிச்சாலையுமிருக்கின்றன. ஸ்டேஷனுக்கு சமீபத்தில் வசதியான சத்திரமிருக்கின்றது.

ஸ்ரீராமஜயம்



இம்மட்டோடு இந்நூலை முடிவு செய்கிறோம்.

இனி,

எனது காசி யாத்திரை.

எனது பதரிகாச்ரம யாத்திரை.

ஸ்ரீ காசி க்ஷேத்திர விமர்சம்.

என்னும்

நூல்களை இயற்ற உத்தேசித்திருக்கிறோம். இவைகள் இறைவன் திருவருளாலும் அன்பர்கள் ஆசீர்வாதத்தாலும் விபவ ஸூ சித்திரை மாதத்தில் வெளிவரும்.

சுபமஸ்து.

ஸ்ரீ வைஷ்ணவ அச்சுக்கூடம், சென்னை.

ஸ்ரீ:ஸ்ரீமதே ஜயம்

## உயர் தரமான புஸ்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ ராமாயண சாரம் | 1 | 8 | 0 |
| ஸ்ரீமத் பாரத சாரம் | [illegible] | 2 | 0 |
| ஸ்ரீ பாகவத சாரம் | 1 | 0 | 0 |
| ஸங்க்ஷேப ராமாயணம் | 0 | 8 | 0 |
| பீஷ்ம சரித்திரம் | 0 | 6 | 0 |
| குஹன் சரித்திரம் | 0 | 4 | 0 |
| ஹனுமத் பிரபாவம் | 0 | 3 | 0 |
| பக்த லீலாம்ருதவசனம் | 3 | 0 | 0 |
| சேஷாவதார சிறப்பு | 0 | 2 | 0 |
| குருபரம்பரை (6000 படி) | 2 | 8 | 0 |
| அஷ்டப்ரபந்தம் | 3 | 8 | 0 |
| சடகோபாந்தாதி | 0 | 10 | 0 |
| பெருமாள் திருமொழி விரிவுரை | 1 | 12 | 0 |
| திருச்சந்த விருத்தம் ” | 1 | 12 | 0 |
| திருமாலை முதலியன ” | 1 | 6 | 0 |
| சிறிய திருமடல் ” | 0 | 12 | 0 |
| பெரிய திருமடல் ” | 1 | 0 | 0 |
| திருவெழு கூற்றிருக்கை ” | 0 | 6 | 0 |
| முகுந்தமாலை ” | 0 | 8 | 0 |
| கோபிகா கீதை | 0 | 4 | 0 |
| ஆரியமத உபாக்கியானம், 1-ம் பாகம் | 0 | 8 | 0 |
| ஆரியமத உபாக்கியானம், 2-ம் பாகம் | 0 | 10 | 0 |

**பட்டாபிராமன் கம்பெனி,**

ஸ்ரீ வைஷ்ணவ கிரந்தாலயம்

183, தங்கசாலை வீதி, மதருஸ்.